# தமிழ் அரிச்சுவடி

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

ஆய்த எழுத்து ஃ

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல்செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே.



# அதிமேதகு சனாதிபதி அவர்களின் செய்தி

**அன்பான பிள்ளைகளே !**

நாம் அன்று சுதந்திரம் பெறும்போது எம்மைவிடவும் பின்னடைந்திருந்த பல நாடுகள் இன்று எம்மைப் பின்தள்ளி நீண்ட தூரம் முன்னேறிச் சென்றுவிட்டன. எனினும், இன்று நாம் அந்த நாடுகளைப் பின்பற்றவோ அந்த அபிவிருத்திகளின் சாயலைக் கொண்டு செயற்படவோ தயாராக வேண்டியதில்லை. அதே போன்று கைவிட்டுப்போன மரபுரிமைகளைப் பற்றிப் பேசிப் பேசித் தவிக்கவும் வேண்டியதில்லை. நாம் செய்ய வேண்டியதெல்லாம் அனைத்தையும் பின்தள்ளிச் சென்று உலகுக்கு அவர்கள் அடையாத அபிவிருத்தியொன்று தொடர்பான புதிய வழிகளைக் காட்டுவதேயாகும்.

அன்பான பிள்ளைகளே! நாம் இப்போது உங்களது எதிர்காலத்தைக் கட்டியெழுப்புவதில் ஈடுபட்டுள்ளோம்.

**மஹிந்த ராஜபக்ஷ**

**இலங்கை சனநாயக சோசலிசக் குடியரசின் சனாதிபதி**

(2010.08.15 ஆம் திகதியன்று அம்பாந்தோட்டை, மாகம்புர சர்வதேச துறைமுகத்திற்கு நீர்நிரப்பும் வரலாற்று முக்கியத்துவம் மிக்க நிகழ்வின்போது சனாதிபதி ராஜபக்ஷ அவர்கள் ஆற்றிய உரையின் ஒரு பகுதி).

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

அன்பான பிள்ளைகளே,

எங்கள் தாய்நாட்டின் பெறுமதிமிக்க வளம் நீங்களே. கல்வியினூடாகவே உங்கள் பெறுமதி மெருகூட்டப்படுகிறது. இப்பணியை நிறைவேற்றுவதில் தொடர்ந்து அர்ப்பணிப்புடனுள்ள எமது நோக்கம், மிகச் சிறந்தவற்றை உங்களுக்கு வழங்குவதே.

அரசுக்கு மக்களால் செலுத்தப்படும் வரியைத் திரட்டிப் பெறப்படும் தேசியச் செல்வத்தைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட இந்நூலை உங்களுக்கு நன்கொடையாக அளிப்பது, அறிவுத் திறன்களும் நற்பண்புகளும் நிறைந்த ஒருவராக உங்களை ஆக்கும் எதிர்பார்ப்பிலேயேயாகும். இதனூடாக ஒளிபெறும் நீங்கள் தேசியச் செல்வத்திற்கு வளமூட்டுவீர்கள் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. இதயமற்ற, வன்மையான பாறையிலிருந்து கருணையையும் அன்பையும் வெளிப்படுத்துகின்ற சிலைகளை வடித்தவர்களும் கண்ணாடிச் சுவரின் மீது இலக்கிய நயமுள்ள வாசகங்களை எழுதியவர்களுமாகிய பெருமைமிக்க மூதாதையரின் வழிவந்த உங்களில் ஆக்கச் சிந்தனையை ஏற்படுத்த இந்நூல் கைகொடுக்கும்.

இந்நூலை உங்களுக்கு வழங்குவதற்காக அர்ப்பணிப்புடன் செயலாற்றிய சகலருக்கும் மற்றும் கல்வி வெளியீட்டுத் திணைக்களத்திற்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**பந்துல குணவர்தன**
கல்வி அமைச்சர்

## முன்னுரை

எப்பொழுதும் மாற்றமுறும் சமூகத்தில் வாழும் நீங்கள் பன்மைச் சமூகப் பிரவாகத்திற்கு வெற்றிகரமாக முகங்கொடுக்கத் தயாராவது மிக இன்றியமையாததாகும். இதற்கு அவசியமான அறிவையும் ஆற்றல்களையும் விருத்தி செய்யும் செயற்பாட்டில் நூல்களின் பங்களிப்பு அளப்பரியதாகும்.

இலங்கை சனநாயக சோசலிசக் குடியரசினால் வழங்கப்படுகின்ற இந்நூலானது உங்கள் முன்னேற்றத்திற்கு மட்டுமன்றி நாட்டின் அபிவிருத்திக்கும் பங்களிக்கும் என்பதில் சந்தேகமில்லை. கல்வி என்னும் கடலைக் கடப்பதற்கு இதனை ஓர் ஓடமாகப் பயன்படுத்தி வெற்றி இலக்கை அடையப் போகும் நீங்கள், சிந்தனையாற்றலும் நடுநிலை ஆளுமையுமுடைய பூரண பிரசையாக வேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

இந்த அரிய பணியில் அர்ப்பணிப்புடன் ஈடுபட்ட எழுத்தாளர் குழு உறுப்பினர்களுக்கும் பதிப்பாசிரியர்களுக்கும் சரவை பார்த்து ஒத்துழைப்பு நல்கியோருக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது உளம் நிறைந்த நன்றிகள் உரித்தாகட்டும்.

**திஸ்ஸ ஹேவாவிதான**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
''இசுருபாய''
பத்தரமுல்ல
2012. 03. 20.

## கண்காணிப்பும் மேற்பார்வையும் ~ மீள்பதிப்பு 2012

**திரு. திஸ்ஸ ஹேவாவிதான**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**திருமதி. கே. வீ. நந்தனி ஸ்ரீயாலதா**
ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## இணைப்பாக்கம் ~ மீள்பதிப்பு 2012

**லெனின் மதிவானம்**
பிரதிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## எழுத்தாளர் குழு

**செல்வி. வ. விஜயலெட்சுமி**
பிரதம செயற்றிட்ட அதிகாரி தேசிய கல்வி நிறுவகம்.

**செல்வி ச. நந்தினி**
அபிவிருத்தி உதவியாளர், இந்து கலாசாரத் திணைக்களம்

**திரு கே. காத்திகேசு (ஆசிரிய ஆலோசகர்)**
வலயக் கல்விப் பணிமனை, பலாங்கொடை

**திரு எம். அகிலன் (ஆசிரியர்)**
ம. மா/ புளியாவத்தை த. ம. வி. – டிக்கோயா.

**திரு சிவனு கெனடி (ஆசிரியர்)**
ம.ம./ஹ/மலைமகள் தமிழ் வித்தியாலயம் – ஹற்றன்

## பதிப்பாசிரியர்

**பத்மா சோமகாந்தன்**
(ஓய்வுபெற்ற அதிபர்)

**திரு. லெ. சிவராஜா**
அதிபர், எலமான் தமிழ் வித்தியாலயம், பதுளை

## சரவை பார்ப்பு

**திரு. ஏ.என்.வரதராஜ்**
ஆசிரியர், ஹைலன்ஸ் மத்திய கல்லூரி - ஹற்றன்.

**திரு.க.ஜெயகாந்தன்**
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## அட்டை படம், சித்திரம்

**திரு. ந. ஞானவேல்**
செயற்றிட்ட அதிகாரி - தேசிய கல்வி நிறுவகம்.

## இறுதி மதிப்பீடு

**திரு. வி.எஸ்.இதயராஜா**
பிரதிக் கல்விப் பணிப்பாளர்
சமய விழுமிய பிரிவு - கல்வி அமைச்சு.

**திரு. மு. மனோகரன்**
இந்துசமய ஆசிரிய ஆலோசகர், வலயக் கல்விப் பணிமனை
களுத்துறை.

# பொருளடக்கம் பக்கம்

# 1.1 கடவுள்

கடவுள் ஒருவரே மெய்ப்பொருள். அவரால் அனைத்து உயிர்களும் படைக்கப்பட்டுள்ளன. யாவற்றையும் கடந்த இறைவன் பரம் பொருள், தெய்வம் ஆகிய பெயர்களாலும் அழைக்கப்படுகின்றான். கடவுளின் உண்மை பற்றி வேதங்கள் தொடக்கம் சைவசித்தாந்தம் வரை ஏற்றுக் கொண்டுள்ளன. இவ்வாறு கடவுள் உண்மை பற்றிய கருத்தை வேதத்தின் ஞானகாண்டப் பகுதியான உபநிடதங்களில் வரும் கதை ஒன்றின் மூலம் தெளிவாகக் கற்போம்.

வேதக் கல்வியை முடித்து விட்டு வீட்டிற்கு வந்த சுவேதகேது என்ற மகனை தந்தையராகிய உத்தாலகர் என்பவர் அனைத்திற்கும் அடிப்படை யாது? என வினாவுகின்றார். சுவேதகேதுவிற்குப் பதில் கூற முடியவில்லை. இதனை அறிந்த உத்தாலகர் எளிய உதாரணத்தின் மூலம் கடவுற் பற்றிய உண்மையை விளக்குகின்றார். உப்புக்கல் ஒன்றை எடுத்து வரும் படியும் அதனை நீரில் கரைக்கும் படியும் வேண்டுகிறார். அவ்வாறு செய்தபின் உப்புக்கல் எங்கே? என்று வினாவுகின்றார். அந்த உப்புக்கல் நீரில் கலந்து பரந்துள்ளது. அது போலத்தான் கடவுளும் உலகெங்கும் பரந்து வியாபித்துள்ளார். என விளக்குகிறார். மேலும் ஆலம் விதையை எடுத்துவரப் பணித்து அதைச் சிறிது சிறிதாகப் பிரித்துப் பார்க்கும்படி கூறுகின்றார். முடிவில் ஒன்றுமே தெரியவில்லை என்கிறான் சுவதேகேது அப்படியா இச் சிறிய ஆலம் விதை பெரிய ஆல விருட்சம் ஆவது போல கடவுளும் புலனுக்கெட்டாமல் எங்கும் வியாபியாகவும் அவர் ஒருவரே உண்மையாகவும் உள்ளார் என உத்தாலகர் கூறுகிறார். இவ் உரையாடல்கள் உபநிடதங்களில் சிறந்ததாகக் கருதப்படும் சாந்தோக்கிய உபநிடதத்தில் காணப்படுகின்றன.

இக்கடவுள் உண்மை பற்றி ''ஏகம்ஸத்'' என்ற வேத வாக்கியமும் வலியுறுத்தியுள்ளது. அத்துடன் கடவுளின் உண்மைத் தன்மையை ''ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே.....'' ''வானாகி மண்ணாகி.... ''எல்லா உலகமும் ஆனாய் நீயே...'' என்ற தேவாரப்பாடலடிகள் மூலமும் நாம் அறிந்து கொள்ளலாம். திருமந்திரம், ''ஒன்றவன் தானே'', ''ஒருவனே தேவன்'' என்றும் ''ஏகன் அனேகன் இறைவனடி வாழ்க'' எனச் சிவபுராணமும்,''ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரந் திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ'' என்ற திருவாசகப் பாடலடியும் கடவுள் உண்மையை எடுத்துக் காட்டுகின்றன.

### பாடச் சுருக்கம்

- கடவுள் ஒருவரே உண்மையானவர்.
- வேதம், உபநிடதம், சைவ சித்தாந்தம் என்பன கடவுள் உண்மைத் தன்மை பற்றிக் கூறுகின்றன.
- சாந்தோக்கிய உபநிடதத்தில் சுவதகேது - உத்தாலகர் உரையாடல் கடவுள் உண்மை பற்றிக் கூறுகின்றது.
- கடவுள் உண்மைக்கு ஆலம் விதை, உப்புக்கல் ஆகியன உதாரணங்களாகக் கொள்ளப்படுகின்றன.
- திருமுறைத் தோத்திரப் பாடல்கள், பிற்காலத் தோத்திரப் பாடல்கள் என்பன கடவுள் உண்மை பற்றிக் கூறியுள்ளன.

### பயிற்சிகள்

1. கடவுளைக் குறிக்கும் வேறு பெயர்கள் இரண்டு தருக.
2. கடவுளின் உண்மை பற்றி எந்த உபநிடதம் விளக்குகின்றது?
3. கடவுள் உண்மைக்கு உதாரணமாகக் காட்டப்பட்ட பொருட்கள் யாவை?
4. கடவுள் உண்மைக்கு எடுத்துக் காட்டப்பட்ட திருமந்திரப் பாடலடி யாது?
5. வேத வாக்கியம் கூறும் கடவுள் உண்மைக்குரிய சொற்றொடர் யாது?

### செயற்பாடு

கடவுள் உண்மையை நிரூபிக்க மாணவர்களை நான்கு குழுக்களாகப் பிரித்து ஒவ்வொரு குழுவிற்கும் கதைகளைத் தேடும்படி கூறி, சேகரித்த பின் வகுப்பிற் கலந்துரையாடவும்.

# 1.2 ஆலய வழிபாடு - I

## ஆலயத்துக்குச் செல்லும் முறை

இறைவன் வீற்றிருந்து ஆன்மாக்களுக்கு அருள் புரியும் இடம் ஆலயம் ஆகும். ஆலயம் என்பதில் 'ஆ' என்பது ஆன்மா: 'லயம்' என்பது ஒடுக்கம் எனப் பொருள்படும். ஆன்மாக்கள் மனதை ஒரு நிலைப்படுத்தி இறைவனை வழிபடுவதற்கு ஏற்ற இடம் ஆலயமாகும். கோயில் என்பது கோ + இல் எனப்பிரிக்கப்படும். கோ என்றால் இறைவன் இல் என்பது உறையும் இடமாகும். எனவே கோயில் என்பது இறைவன் உறையும் இடம் எனப்பொருள்படும்.

இறைவன் எங்கும் நிறைந்தவன். எல்லாம் அறிபவன். அவன் எமக்குள்ளேயே இருக்கிறான். இவ்விறைவனைத் தேடி எங்கும் அலைய வேண்டியதில்லை என்று நம் முன்னோர் கூறுவர். அப்படியானால் நாம் ஏன் ஆலயத்துக்குச் செல்ல வேண்டுமென்ற வினா எமக்குள் எழலாம். இறைவன் 'தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார்' என்ற போதிலும் அவனை வணங்குவதற்கு ஏற்ற இடம் ஆலயமே ஆகும். பசுவின் உடலெங்கும் பரந்திருக்கும் பாலினை அதன் மடியிலிருந்து கறந்து கொள்வதற்கு ஒப்பானதே ஆலய வழிபாடு. ஔவை மூதாட்டியின் ''ஆலயம் தொழுவது சாலவும் நன்று''. ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' (உலகநாதர்) - (உலகநீதி) வாக்குகள் இதனை அர்த்தப்படுத்துகின்றன.

ஆலயத்திற்கு நாம் நாள் தோறும் சென்று முறைப்படி வழிபாடு செய்தல் வேண்டும். நாள் தோறும் செல்ல முடியாதவர்கள் வெள்ளிக்கிழமைகளில் மாத்திரமாவது செல்வது அவசியமாகும். இதனை விட பிரதோஷம், பௌர்ணமி, அமாவாசை, திருவாதிரை, கார்த்திகை, விநாயகர் சதுர்த்தி, கந்தசஷ்டி, சிவராத்திரி, நவராத்திரி போன்ற விரத காலங்களிலும், சித்திரை வருடப்பிறப்பு, ஆடிப்பூரம், தீபாவளி, தைத்திருநாள் போன்ற பண்டிகைக் காலங்களிலும் ஆலயம் சென்று இறைவனை தரிசித்தல் வேண்டும்.

ஆலயம் தூய்மை நிறைந்த இடமாகும். ஆதலால் அங்கு செல்வோர் உடலையும், உள்ளத்தையும் தூயனவாய் வைத்துக் கொள்ள வேண்டும். அழுக்கு நிறைந்த உடலும், சஞ்சலம் நிறைந்த மனமும் வழிபாட்டிற்கு ஏற்றதல்ல. எனவே மாமிசம் புசித்தவர், மது அருந்தியவர், அசுத்தமான பொருளைத் தீண்டியவர், மனதில் குற்றம் நிறைந்தோர், ஆசாரங்களைப் பின்பற்றி நடக்காதோர் ஆசௌசம் உள்ளோர் ஆலயத்துக்குச் செல்வதைத் தவிர்த்தல் நன்று.

ஆலயத்துக்குச் செல்வோர் நீராடி, தூய ஆடைகளை அணிந்து சிவசின்னங்களைத் தரித்து 'நமசிவாய' என்ற சிவ மந்திரத்தை உச்சரித்த வண்ணம் மெல்ல மெல்ல நடந்து செல்ல வேண்டும்.

## ஆலய வழிபாட்டுக்குக் கொண்டு செல்லத்தக்க பூசைப் பொருட்கள்

சாதாரணமாக நாம் பெரியவர்களைக் காணப்போகும் போது கூட வெறுங்கையுடன் செல்வதில்லை என்பது எமக்குத் தெரியும். அதுபோல ஆலய வழிபாட்டிற்காகச் செல்லும் போது பால், தயிர், புஸ்பங்கள், இளநீர் போன்ற அபிஷேகத்துக்குரிய பொருள்களை இயலுமான மட்டும் எடுத்துச் செல்லலாம். பூசைப் பொருட்களாகிய வெற்றிலை, பாக்கு, வாழைப்பழம் தேங்காய், கற்பூரம், ஊதுபத்தி போன்றவையும், கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ ஆகியவற்றையும் வேறு ஏற்ற பொருட்களையும் மெய்யன்போடு பூசைத் தட்டில் வைத்து அவற்றை அரைக்கு மேல் கைகளில் ஏந்திய வண்ணம் இறைசிந்தனையுடன் செல்வது நன்று. இவற்றுள் ஒன்றையேனும் எடுத்துச் செல்ல முடியாதவர்கள் ஒரு பச்சிலையாவது கொண்டு செல்வது நல்லது.

ஆலய வீதியை அடைந்ததும் பூசைத் தட்டில் தாங்கிச் சென்ற பொருட்களை ஆலய வெளிப்புற நீர் நிலையில் கழுவிய பின் கை, கால், முகம் கழுவி விதிக்கப்பட்ட ஒழுங்கு முறையில் வழிபாடு செய்தல் வேண்டும். ஆலயஞ் சென்று அங்கு நடைபெறும் பூசை வழிபாடுகளின் நிறைவில் வழங்கப்படும் விபூதி, பிரசாதம் பெறுதல் வேண்டும்.

## ஆலய வழிபாட்டில் செய்யத்தக்கவை?

ஆலயத்துக்குச் செல்லும் அடியார்கள் எப்படி ஒழுக வேண்டுமென்ற நியதி உண்டு. அவை, மனத்தோடும் செயல்களோடும் தொடர்புபட்டவை. ஆலயத்துக்குச் சென்றதும் சமய ஆசாரங்களைப் பின்பற்றி நடக்க வேண்டும். தூய்மை பொருந்திய அவ்விடத்தில் மனதை ஒரு நிலைப்படுத்தி இறை சிந்தனை மிக்கதாய் வைத்திருக்க வேண்டும். மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களும் இறைவன்பால் திரும்ப வேண்டும். மனம் இறை சிந்தனையிலும், வாக்கு இறைவன் புகழ் பாடுதலிலும், காயமாகிய உடல் இறைவனை வணங்குதலிலும் பணிசெய்வதிலும் ஈடுபடல் வேண்டும். இவ்வாறு சமய விழுமியங்களை நாம் கடைப்பிடிக்கும் போது இறையருள் எமக்குக் கிட்டும். மன அடக்கம், மன ஒருமைப்பாடு போன்ற சமய விழுமியங்கள் எமது வாழ்வை மேம்படுத்துவதுடன் சமுதாய வாழ்வையும் வளப்படுத்தும்.

> பூசை தொடங்கி முடியும் வரை அவ்வத் தெய்வங்களை உரிய அனுட்டான முறைகளை வணங்குதல் அவசியம். இவ்வாறு ஒழுக்க நியதிகளைக் கடைப்பிடித்து ஒழுகும் போது இறைவன் அருளால் அதன் பலாபலன்களைப் பெற்றுக் கொள்ள முடியும்.

## ஆலய வழிபாட்டில் செய்யத்தகாதவை

ஆலயம் இறைவனின் உறைவிடம். அங்கு இறை அருளைப் பெறுவதற்காகச் செல்கின்ற அடியார்கள் மனதுக்கும், உடலுக்கும் ஒவ்வாத செயல்களைச் செய்யக்கூடாது. கோயிலுக்குச் செல்வதற்கு உரிய ஆசார முறைகளை தவறிச் செல்லல், கால் கழுவாது செல்லல், எச்சில் துப்புதல், மலசலங்கழித்தல், மூக்குச் சிந்துதல், தூங்குதல், காலை நீட்டிக் கொண்டிருத்தல், தலை மயிரினைக் கட்டுதல், சூதாடுதல், தலையிலே ஆடையைத் தரித்துக் கொள்ளல், தோளிலே சால்வையைத் தரித்துக் கொள்ளல், பாதணிகளை அணிந்து கொள்ளுதல், சண்டையிட்டுக் கொள்ளுதல், விக்கிரகங்களைத் தொடுதல், தூபி, பலிபீடம், விக்கிரகம், போன்றவற்றின் நிழலை மிதித்தல், சுவாமிக்கும் பலிபீடத்திற்கும் இடையில் நமஸ்கரித்தல், திரை இட்ட பின் வணங்குதல் போன்றவை செய்யத் தகாத செயல்களாகும். இக்குற்றங்களைப் புரிபவர் நரகத்திலே வீழ்ந்து வருந்துவர்.

## இயம, நியமங்கள்

இறைவனைப் போற்றி வாழும் போது நம் வாழ்வு மேன்மை அடையும். அத்தகைய மேன்மையினைப் பெற எப்போதும் நாம் கடைப்பிடித்து வாழ வேண்டியவை இயமம் எனப்படும். உயிர்களிடம் அன்பு காட்டுதல், எப்போதும் உண்மையைப் பேசுதல், மூத்தோரை மதித்தல், களவெடுக்காதிருத்தல், இரக்கச் சிந்தனை, வஞ்சனை செய்யாமை, பொறுமையைக் கடைப்பிடித்தல், மனங்கலங்காமை போன்றவை இயமங்களுள் அடங்கும்.

'நினைவு நல்லது வேண்டும், நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்' என்ற பாரதியின் கூற்றினைப் போலும் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு உற்ற துணை நிற்பவை நியமம் ஆகும். கடவுள் உண்டு எனும் நம்பிக்கை, தவம், உயிர்களுக்கு உறுதி பயக்கும் அறிவு நூல்களை வாசித்தல், கர்வமின்றி அடக்கமாக இருத்தல், செபம், விரதம் போன்றன நியமப் பண்புகளாகும்.

### பாடச் சுருக்கம்

- ஆலயமானது இறைவன் சிறப்பாக வீற்றிருந்து அருள் புரியும் இடமாகும்.
- ஆலயத்திற்கு உரிய முறையில் செல்லுதல் வேண்டும்.
- ஆலயத்திற்குச் செல்வோர் பூசைப் பொருட்களைக் கொண்டு செல்லுதல் உத்தமம்.
- ஆலயத்திற்குச் செல்வோர் செய்யத் தக்க செயல்களைக் கடைபிடிக்கும் அதே வேளை செய்யத் தகாத செயல்களை விலக்க வேண்டும்.
- ஆலயத்தில் செய்யத்தக்க தொண்டுகள் எமது ஆன்மீக உணர்வை வளர்க்க வல்லன.

பயிற்சிகள்

**01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக**

1. ஆலயம் என்பதன் பொருள் யாது?
2. ஆலய வழிபாடு ஏன் அவசியமாகும்?
3. ஆலயத்திற்குக் கொண்டு செல்லக் கூடிய பூசைப்பொருட்கள் மூன்று தருக.
4. ஆலயத்தில் செய்யத் தக்க செயல்கள் நான்கு தருக.
5. ஆலயத்தில் செய்யத் தகாத செயல்கள் மூன்று தருக.
6. ஆலயத்தில் செய்யக் கூடிய தொண்டுகள் நான்கு தருக.

**02. பின்வரும் வாக்கியங்கள் சரியாயின் (✓) சரியெனவும் பிழையாயின் (x) பிழையெனவும் அடைப்புக் குறிக்குள் அடையாளமிடுக.**

1. கோயிலில்லா ஊரில் குடியிருக்கலாம் ( )
2. ஆலயம் தூய்மையும் தெய்வீகத் தன்மையும் நிறைந்த இடமாகும் ( )
3. விக்கிரகங்களைத் தொட்டு வணங்குவது சாலச் சிறந்ததாகும் ( )
4. ஆலயத்தில் செய்யத்தகாத செயல்களும் உண்டு ( )
5. ஆலயத்தில் அமைதியைப் பேணுதல் அவசியமாகும் ( )

**செயற்பாடு**

ஆலயத்தில் செய்யத் தகாத செயல்களைத் துண்டுப் பிரசுரமாக எழுதிக் காட்சிப்படுத்துக.

# 1.3 ஆலய வழிபாடு - II

## கோபுர தரிசனம்



கோயிலில் மூலஸ் தானத்திற்கு நேரே பிரதான வாயில் அமைக்கப்படும். அந்த வாயிலுக்குமேல் உயர்ந்த கோபுரம் ஒன்று காணப்படும். கோயிலில் உள்ள ஏனைய விமானங்களை விட அந்தக் கோபுரம் மிக உயர்ந்து காணப்படும். நெடுந் தொலை விலிருந்து பார்த்தால் கூட கம்பீரமாகக் காட்சி அளிக்கும். அதற்கு இராஜ கோபுரம் என்றும் பெயர் உண்டு. இதனை தூலலிங்கம் எனவும் அழைப்பர். வெகு தொலைவிலிருந்து கண்ணுக்குத் தென்படும்போது அதை தெய்வ சொரூபமாகவே எண்ணி வணங்குவார்கள். ''கோபுர தரிசனம் கோடி புண்ணியம்'' என ஆன்றோர் குறிப்பிடுவர்.

கோபுர அமைப்பில் பல்வேறு வகையான வடிவங்கள் காணப்படுகின்றன. அவையாவன தேவர்களது, தேவகணங்கள், தெய்வவடிவங்கள், பறவை சினங்கள், மிருக இனங்கள், புராண இதிகாச காட்சிகள், மானிட வடிவங்கள், மெய்யடியார்கள் மற்றும் ஏனைய வடிவங்களாகும். இவ்வுலகில் இவை அனைத்திற்கும் இடமுண்டு என்பது கோட்பாடாகும். இக்கோட்பாடு அண்டத்தில் இன்னது உள்ளது இன்னது இல்லை என்ற கருத்தை விளக்குகின்றது.

இராஜகோபுரத்தின் அடுக்குகள் பொதுவாக ஒற்றை விழும் எண்ணில் அமைந்திருக்கும். மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று இவ்வாறு அதில் அமைந்துள்ள நிலைகள் ஒன்றன் மேல் ஒன்றாகப் பெருகிக் கொண்டே போகும்.

பஞ்சேந்திரியங்களினைக் கொண்டு புற உலகை அறிகின்ற செயலை நிறுத்தி, மனத்தை ஒரு நிலைபடுத்தி பரம்பொருளாகிய இறைவனிடத்தே தம் பயணம் அமைய வேண்டும் என்னும் கோட்பாட்டை இராஜகோபுரத்தின் வாயினுள்ளே பிரவேசித்தல் விளக்குகின்றது.

## பலிபீடம்

ஆலயத்தின் வாயிலின் மேலே அமைக்கப்படும் இராஜகோபுரத்தைத் தாண்டி ஆலயத்தினுள்ளே நுழைந்தவுடன் எம் கண்ணுக்கு எதிரிலே புலப்படுவது கொடித்தம்பம், பலிபீடம், நந்தி எனும் மூன்றுமாகும். இவற்றில் பலிபீடத்தின் அருகில் சென்று வீழ்ந்து வழிபடுகின்றபோது எமது மனதில் எழும் தீய எண்ணங்கள், இச்சைகள் அனைத்தும் பலிபீடத்தில் பலி கொடுக்கப்படுகின்றன. இதன் பின்னர்; நாம் தூய சிந்தனை, மேலான எண்ணத்துடன் மனிதத்தன்மை வாய்ந்த மனிதனாக எழுந்திருக்கின்றேன் என்ற எண்ணமே வலிமை பெறுகின்றது. அவ் எண்ணத்தின் சக்தி நாம் புதியதொரு பிறவி எடுப்பதற்குச் சமனாகும்.

## நந்தி

ஆகமமுறைப்படி அமைக்கப்பட்ட ஆலயங்களில் சிவலிங்கம், நந்தி, பலிபீடம், கொடிமரம் என்பன ஒரே வரிசையில் இருக்கக் காணலாம். கர்ப்பக்கிருகத்திலே உள்ள சிவனைப் பார்த்தவாறு நந்தி அமைந்திருக்கும் நந்தி ஜீவான்மாவைக் குறிக்கிறது. இது மூலப்பொருளான இறைவனைப் பார்த்த வண்ணமாக உள்ளது. இறைவனைச் சென்றடைய வேண்டும் என்பதே ஒவ்வொரு ஜீவான்மாவினும் குறிக்கோள் ஆகும். இக்கோட்பாட்டை விளக்கும் வண்ணமாக நந்தி சிவனை நோக்கிக் காணப்படுகின்றது. எனவே, பக்தர்கள் வழிபடும்போது மூலஸ்தானத்திற்கும் நந்திக்கும் குறுக்கே செல்லாமல் வழிபட வேண்டும் என்ற நியதி உண்டு. இந்நந்தியின் உத்தரவு பெற்றே கர்ப்பக் கிரகத்தில் எழுந்தருளியிருக்கும் சிவனை நாம் தரிசனம் செய்யவேண்டும்.

## மூலவர்

மூலவர் என்பவர் ஆலயத்தின் மூலமாகிய கர்ப்பகிரகத்தில் உள்ள சிவலிங்கம் ஆகும். இவரைத் தரிசிக்க ஆலய வாயிலில் எழுந்தருளியிருக்கும் துவார பாலகர்களிடம் அனுமதி பெற்றே செல்ல வேண்டும்.

இலிங்கம் என்பதற்கு குறி என்று பொருள். குறி என்றால் அடையாளம் இலிங்கம் என்ற சொல்லை லிங்+கம் எனப் பிரிக்கலாம். ''லிங்'' என்பது அண்டசராசரங்கள் அனைத்தும் ஒடுங்குமிடம் என்றும் ''கம்'' என்பது அவ்வாறு ஒடுங்கிய அப்பொருள் மீண்டும் தோன்றுவதற்குரிய இடம் என்றும் பொருள்படும். இறைவனின் அருவுருவத் திருமேனியே சிவலிங்கமாகும்.

சிவலிங்கத்தின் அடிப்பாகம் பிரமபாகம் என அழைக்கப்படும். இவ்லிங்கங்கள் சுயம்புலிங்கம், கணலிங்கம், தைவிகலிங்கம், மானுடலிங்கம், ஆரிடலிங்கம் என ஐந்து வகைப்படும்.

சுயம்புலிங்கம் :- தானே தோன்றியலிங்கம்

கணலிங்கம் :- விநாயகர், இராமர், முருகன் போன்ற கணங்களால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம்.

தைவிகலிங்கம் :- இருடிகளால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம்.

மானுடலிங்கம் :- மனிதர்களால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம்.

சிவலிங்கத்தை வழிபட்டால் யாவற்றையும் வழிபட்ட பலன் கிடைக்கும். இச்சிவலிங்க வழிபாட்டினை 28 சிவாகமங்களும் விரிவாக விவரிக்கின்றன. மக்கள் நன்னெறியுடன் வாழ நாயன்மார்கள் அவதரித்து பல தலங்களுக்கும் சென்று தரிசித்து நமக்கு முத்தியடையும் மார்க்கத்தையும் காட்டியிருக்கிறார்கள். இந்த கலியுகத்திற்கு சிவஞானமே சிறந்த ஞானம்.

## பரிவார தெய்வங்கள்

கருவறையிலுள்ள மூலவிக்கிரகத்திற்குப் புறம்பாக பிரகாரங்களில் அமைக்கப்படும் தெய்வங்கள் பரிவார தெய்வங்களாகும். சிவன் கோயில்களில் பிரதான ஆலயத்தின் (வலப்புறமாக) தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கிப் பிள்ளையாரும் (இடப்புறமாக) வடமேற்கு மூலையில் கிழக்கு நோக்கிச் சுப்பிரமணியப் பெருமானும் வீற்றிருப்பர். வடகிழக்கில் தெற்கு நோக்கி வசந்த மண்டபமும், மேற்கு நோக்கி யாகசாலையும் அமைந்திருக்கும். அதன் அருகில் மேற்கு நோக்கி வைரவ மூர்த்தமும் அமைந்திருக்கும். ஏனைய பரிவார தெய்வங்கள் உட்பிரகாரத்தில் அமைந்திருக்கும். உட்பிரகாரம் என்பது ஆலயத்தின் முதலாவது உள் வீதியாகும்.

நந்தி, பலீபீடம், கொடிமரம் என்பவற்றிற்கு நேர் வடக்கே நவக்கிரகமும், கிழக்கு நோக்கிய கோபுரத்திற்கு உள்ளே அதன் இருபுறத்தும் மேற்கு நோக்கியவாறு சூரிய சந்திரர்களுக்கெனத் தனியான சந்நிதானமும், நாயன்மார்களுக்கான சந்நிதானம் தெற்கில் வடக்கு நோக்கியவாறு அமைவது மரபு.

## அருச்சனை

இறைவனுடைய பல்வேறு திரு நாமங்களை ஒவ்வொன்றாகச் சொல்லி மலரிட்டுப் பூசிப்பது அருச்சனையாகும். இது பூசையின் முக்கிய அம்சமாகும் .

''திருநாமம் ஐந்தெழுத்தும் செப்பாராகில்...'' என்னும் அப்பருடைய தேவாரப் பதிகம் அருச்சனையின் முக்கியத்துவத்தைச் சிறப்பாக எடுத்தியம்புகின்றது. அருச்சனையில் மலர்கள் பிரதானமானவை. எனினும் குங்குமம், வில்வம் முதலிய பத்திர வகைகள், மாதுளம், முத்து என்பனவும் பயன்படுத்தப்படுகின்றன. மலர்ந்த

உள்ளத்தை இறைவனிடம் சமர்ப்பிக்கும் முகமாகவே மலர்களால் அருச்சனை செய்யப்படுகின்றது. அருச்சனையின் ஆரம்பம் வேத காலம் தொட்டு இன்றுவரை நடைபெற்று வருவது சிறப்புக்குரியதாகும். அதாவது யசுர் வேதத்தில் இறைவனது நூறு பெயர்களைக் கூறி வணக்கம் செய்து வழிபடும் மரபினையொட்டி அருச்சனை ஆரம்பித்தது. நாமங்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப அர்ச்சனைகள் பின்வருமாறு அழைக்கப்படும்.

அவையாவன;

பதினாறு நாமங்கள் உச்சரித்தல் :- சோடசநாம அருச்சனை
நூற்றெட்டு நாமங்கள் உச்சரித்தல் :- அஷ்டோத்தர நாம அருச்சனை
முன்னூறு நாமங்கள் உச்சரித்தல் :- திரிசதி நாம அருச்சனை
ஆயிரம் நாமங்களை உச்சரித்தல் :- சஹஸ்ர நாம அருச்சனை

மேற்குறிப்பிட்ட அருச்சனைகளுக்கு மேலதிகமாக இலட்ஷார்ச்சனை, நவகோடி அர்ச்சனை என்பனவும் நடைபெறும்.

விநாயகர், சிவன் ஆகியோருக்குரிய விசேட அர்ச்சனையை பஞ்சமுக அர்ச்சனை என்றும், முருகனுக்குரிய அருச்சனை ஷண்முக அருச்சனை என்றும் அம்பாளிற்குரிய அருச்சனை நவசக்தி அருச்சனை என்றும் கூறப்படும். அருச்சனை இறுதியின் சிறப்பு யாதெனின் வேத மந்திரம் கூறி புஷ்பாஞ்சலி, மந்திர புஷ்பாஞ்சலி, ராஜபுஸ்பாஞ்சலி என விரியும். இதனைத் தொடர்ந்து பஞ்சாராத்தி காட்டப்படும்.

## தோத்திரம்

பூசையின் அடுத்த அங்கமாக பஞ்சாராத்தி காட்டிய பின் தோத்திரம் இடம் பெறும். இதில் நால் வேதங்களும், ஞானிகளால் இயற்றப்பட்ட சுலோகங்களும், தமிழ் வேதமான திருமுறைப் பாடல்களும் ஓதப்படும். திருமுறைப்பாடல்களில் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருப்புராணம் என்ற ஒழுங்கு முறையின்படி ஓதப்படும். பஞ்ச புராணத்தின் பின் திருப்புகழ், அபிராமி அந்தாதி, கந்தரனுபூதி என்பன ஓதப்படும்.

## அட்டாங்க நமஸ்காரம்

ஆலயத்திற்குச் செல்வோர், முறைப்படி இறைவனை வழிபட வேண்டும். ஆண்கள் அட்டாங்க நமஸ்காரம் செய்தல் வேண்டும். அட்டாங்க நமஸ்காரம் எனப்படுவது தலை, காலிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டு அவயவங்களும் நிலத்திலே பொருந்தும்படி வீழ்ந்து வணங்குதல் வேண்டும்.

## அட்டாங்க நமஸ்காரம் பண்ணும்முறை

இந்நமஸ்காரத்தைப் பூமியிலே சிரசை வைத்து, மார்பு பூமியிலே படும்படி வலக்கையை முன்னும் இடக்கையை பின்னும் நேரே நீட்டி பின் அம்முறையே மடக்கி, வலப்புயமும், இடப்புயமும் மண்ணிலே பொருந்தும்படி கைகளை அரையை நோக்கி நீட்டி வலக்காதை முன்னும் இடக்காதைப் பின்னும் மண்ணிலே பொருத்தச் செய்தல் வேண்டும்.

## பஞ்சாங்க நமஸ்காரம்

இம்முறையை ஆலயங்களில் பெண்கள் மேற்கொள்வர். இந்நமஸ்காரமானது தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்து அவயவங்களும் நிலத்திலே பொருந்தும் படி வணங்குதல்

## நமஸ்காரம் பண்ணியபின் செய்ய வேண்டியவை

நமஸ்காரத்தைப் பண்ணிய பின்னர் எழுந்து, இரண்டு கைகளையும் குவித்து ஸ்ரீ பஞ்சாரட்சரத்தை உச்சரித்துக் கொண்டு, கால்களை மெல்ல வைத்து மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும், பதினைந்து தரமாயினும், இருபத்தொரு தரமாயினும் ஆலயப் பிரகாரத்தை வலம் வந்து மீண்டும் சந்நிதானத்திலேயே நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

## தியானம்

உடல் நலம் போற்ற வேண்டும் என்று சொன்னவர்கள் உடலைப் போற்றுகின்ற வழிமுறைகளையும் விளக்கியுள்ளனர். அவற்றுள் குறிப்பிடத்தக்க ஒன்று தியானமாகும். தியானம் என்பது மனதை ஒரு நிலைப்படுத்தி பிரபஞ்சப் பேராற்றலுடன் மனிதன் தன்னை இணைத்துக் கொள்கின்ற வழியாகும்.

தியானத்தின் மூலம் உடல் ஆரோக்கியத்திற்குத் தேவையான சக்தியை வேண்டிய பொழுது நம்மால் பெற முடிகின்றது. நம்முன்னோர்கள் கண்ட மற்றொருமுறை யோகப்பயிற்சியாகும். சுவாசத்தைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதன் மூலம் உடல் உறுப்புக்களின் இயக்கத்தைச் சமன்படுத்துகின்ற வழி இது. எல்லாமே இயற்கையோடு தொடர்புடைய ஆரோக்கிய முறைகள் என்பது குறிப்பிடத்தக்கது.

### பாடச் சுருக்கம்

- இராஜகோபுரம் தூலலிங்கம் எனப்படுகின்றது.
- இராஜகோபுரம் பல அடுக்குகளில் அமைக்கப்படும்.
- வழிபடுபவனின் தீய எண்ணங்கள் பலிபீடத்தில் பலியிடப்படுகின்றன.
- நந்தியின் உத்தரவு பெற்றே மூலவரை வணங்குதல் வேண்டும்.
- இறைவனின் அருவுருவத் திருமேனி சிவலிங்கமாகும்.
- இலிங்கங்கள் பல வகைப்படும்
- கோயிற்பிரகாரங்களில் அமைக்கப்படும் தெய்வங்கள் பரிவார தெய்வங்களாகும்.

### பயிற்சிகள்

01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. தூலலிங்கம் எனப்படுவது யாது?
2. சுயம்புலிங்கம் என்றால் என்ன?
3. பஞ்சபுராணம் ஓதும் முறையை வரிசைப்படி எழுதுக.
4. தியானம் எனப்படுவது யாது?
5. அருச்சனைகள் இரண்டு கூறுக.

### செயற்பாடு

ஆகமமுறைப்படி அமைக்கப்பட்ட ஆலயமொன்றிற்கு ஆசிரியருடன் சென்று வழிபாட்டில் ஈடுபட்டு, அது தொடர்பான அறிக்கையை வகுப்பறையில் சமர்ப்பிக்குக.

தஞ்சைப் பெருங்கோயில் விமானம் பற்றியும் அதன் விசேடம் பற்றியும் ஆராய்க.

# 1.3 விழுமியங்கள்

கடவுளின் படைப்புகளில் மனிதனே மேலான படைப்பாகும். விலங்கு வாழ்கையிலிருந்து வேறுபட்டு மனிதன் மனிதனாக வாழ்வதற்கு உதவுகின்ற பெறுமதிமிக்க வாழ்க்கைப் பண்புகள் விழுமியங்களாகும். இன்று விஞ்ஞான, தொழிநுட்ப, தொடர்பாடல் சாதனங்கள் அற்புதமாக வளர்ச்சியடைந்துள்ளன. இதன் பயனாக மக்களின் வாழ்க்கை வசதிகள், நவநாகரிகங்கள் என்பன மக்களிடையே பெருகியுள்ள போதிலும் மக்கள் இன்பமாக வாழ்கிறார்கள் எனக் கருத முடியாதுள்ளது. மக்கள் மத்தியில் காணப்படுகின்ற ஆசை, மோகம், சுயநல வேட்கை என்பனவே அவர்களின் துன்பத்திற்குக் காரணமாக அமைந்திருக்கின்றது.

மக்கள் எவ்வளவு சொத்து சுகங்களை வைத்திருந்தாலும் உண்மையில் மனித விழுமியங்களை அனுசரித்து வாழும்போது தான் இன்பமான வாழ்க்கையை வாழ முடியும். பிற உயிர்கள் மீது அன்பு காட்டுதல், சேவைசெய்தல், உண்மை பேசுதல், நேர்மையாக நடத்தல், இன்னா செய்யாமை, பொதுச் சொத்துக்களைப் பாதுகாத்தல், மூத்தோரை மதித்தல், நல்லபழக்கவழங்களைப் பேணுதல் போன்ற மனித வாழ்க்கையை மேம்படுத்தும் விழுமியங்களைக் கடைபிடிப்பதன் மூலமாகவே மனித வாழ்க்கையை மேம்படுத்தலாம்.

## (அ) மனவடக்கம்

எமது சிந்தனையில் பல எண்ணங்கள் தோன்றுகின்றன. அவற்றில் நல்லனவும் உண்டு, தீயனவும் உண்டு. எமது எண்ணங்களைப் பொறுத்தே எமது செயல்களும் அமைகின்றன. ஒரு மனிதன் தீய செயல்களைத் தவிர்த்து நற்செயல்களைச் செய்ய மனவடக்கம் உதவுகின்றது.

ஒரு மனிதனை இயக்குவது அவனது மனமாகும். மனம் பலமாக வேண்டுமானால் மனக்கட்டுப்பாடு இருப்பது அவசியம். மனம் பலவீனமடைகின்றபோது அம்மனிதனும் பலவீனமாகிவிடுகின்றான். உடல் ஆரோக்கியம் இருந்து விட்டால் மட்டும் ஒருவன் பலம் பெற்றவனாக ஆகிவிடுவதில்லை.

சுயகட்டுப்பாட்டின் ஆதாரமே மனக்கட்டுப்பாடாகும். இதனை ஒருவர் புரிந்து கொள்வதன் மூலம் மகிழ்ச்சியானதும் வெற்றிகரமானதுமான வாழ்க்கையை நடத்திச் செல்ல முடியும். மனக்கட்டுப்பாட்டின் மூலம் ஒருவர் மன அமைதி, மனத்தூய்மையை அடைகின்றார். பாவம் செய்தல், ஆசை கொள்ளல் போன்ற பலவீனமான நடத்தைகளிலிருந்து ஒருவர் விலகி நிற்கின்றார். அதனால் அம்மனிதரிடம் கவலைகள் தோன்ற இடமில்லை. துன்பம், துயர் ஏற்படுவதற்கான. வாய்ப்பும் இல்லை.

மன அமைதி, மனக்கட்டுப்பாடு பெற்ற மனிதர் எடுத்த காரியங்களில் எல்லாம் வெற்றி அடைகின்றார். நீதியின் வழியில் நேர்மையில் உயர்ந்து நிற்கும் போது அவர் மேற்கொள்கின்ற எந்த காரியங்களிலும் முன்னேற்றம் காண்பார். தான் வெற்றிகரமான வாழ்க்கையை வாழ்வதோடு ஏனையோரும் அவ்வாறான வாழ்க்கை வாழ்வதற்குத் துணை நிற்கின்றார். அதனால் எல்லோருடைய அன்பையும் ஆதரவையும் பெற்றுக் கொள்வார். எனவே சமூகத்தில் உயர் அந்தஸ்த்தைப் பெற்றவராக விளங்குவார்.

மன அடக்கம் உடைய ஒருவர் இல்லற வாழ்க்கையில் சிறப்பாக வாழ்வார். தமது வருமானத்திற்கேற்ப கட்டுப்பாடான வாழ்க்கையை மேற்கொள்வார். உணவுப் பழக்கத்திலும் கட்டுபாட்டைப் பேணி நோயற்ற வாழ்க்கைக்கு ஆளாவார்.

மனிதன் மேல்மட்ட உயிரினத்தைச் சேர்ந்தவன். முடியும் என்ற தன்னம்பிக்கையோடு மனதைக் கட்டுப்படுத்திக் கொள்பவன் மனிதரில் உயர்ந்து விளங்குகின்றான். அத்தகைய கட்டுப்பாட்டிலுள்ள மனிதன் தான் உலகில் சாதனை புரிபவனாவான்.

## (ஆ) இனியவை கூறல்

மனித வாழ்வானது உயர்ந்த இலட்சியங்களையும், எண்ணங்களையும் கொண்டதாக அமைய வேண்டும். எம்மீது அன்பும், கருணையும் கொண்டு நம்மைக் காப்பவராகக் கடவுளை நம் மனதில் இருத்தல் வேண்டும். இத்தகைய செயலால் மாசற்ற மனதைப் பெறமுடியும். மாசற்ற மனம், நல்ல சொல் ஊற்றெடுப்பதற்கு சிறந்ததொரு அடித்தளமாகும்.

இரக்கம், நல்லொழுக்கம், அடக்கம் என்பனவற்றை ஒவ்வொருவரும் தமது உயிரிலும் மேலாக மதித்து வாழவேண்டும். இத்தகைய பண்புகள் மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்துகின்றன. அவ்வகையில் இனியவை கூறலும் மனித வாழ்க்கையை மேம்படுத்தும் பணியில் முக்கியமாக அமைகின்றன.

பிறருக்கு எந்த வகையிலும் துன்பத்தை ஏற்படுத்தாது மகிழ்ச்சியை ஏற்படுத்தும் சொல்லே இனிய சொல்லாகும். மக்கள் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றினாலும் அறம் செய்ய வேண்டும். பேச்சின் உயிர் நாடியாக அமைவது இனியவை கூறலாகும். இனிய சொற்கள் என்பது மாசில்லா அன்பைப் போன்றது. அது சான்றோரின் உள்ளத்திலிருந்து தோன்றுகின்ற சொற்களாகும். பெரியோர்களிடத்தில் பணிவும், அனைவரிடத்திலும் இனிய சொற்கள் பேசுதலும் ஒரு மனிதனுக்குரிய அணிகலன்களாகும். இதனைத் திருவள்ளுவர்

''அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்''

மனமுவந்து ஒருவருக்கு ஒரு பொருளைக் கொடுப்பதை விட முகமலர்ந்து கூறும் இனிய சொற்கள் சிறந்ததாகும் என்றார். ''வாயே வாழ்த்து கண்டாய்'' என்றார் நாவுக்கரசர். வாழ்த்துவது நாவினது தொழிற்பாடாகும். மனிதன் தனது எண்ணங்களையும் கருத்துக்களையும் பிறருக்கு வழங்குகின்றான். இனியவை கூறும் பண்பினை வளர்ப்பதில் ஒருவருடைய சமூகச் சூழல் முக்கியமானதாகும். சமூகச் சூழல் நன்றாக அமையும் போது பிள்ளைகளிடம் நற்பண்புகள் நல்ல பழக்கவழக்கங்கள் உருவாகின்றன. இவற்றின் அடிப்படையில் பிள்ளையின் மனதில் நல்ல சிந்தனை எழுகின்றது. அறிவாற்றலிலும் நற்பண்புகளிலும் சிறந்தவர்களை முன்மாதிரியாகக் கொண்டு விளங்குகின்ற போது நல்ல சிந்தனை ஏற்படுகின்றது. இவை நமது வாழ்விற்கு வழிகாட்டியாக உயர்ந்த நிலையை அடைவதற்கு உதவியாக இருக்கின்றன.

உலகில் இன்பந்தரும் இனிய சொல்லிருக்க வேதனை தரும் கடுமையான சொற்களைக் கூறுவது இனிய கனியை உண்ணாது இனிமையற்ற காயை உண்பதற்கு ஒப்பாகும்.

அன்பும் அருளும் நிறைந்த இனிய உரைகள் பிறருக்கு இன்பத்தைக் கொடுக்கும். பகைவர்களைக்கூட இன்சொல்லால் வெற்றி கொள்ளலாம். கொதிக்கும் நெஞ்சையும் குளிர் மொழி அணைக்கும் என்பது சுவாமி விவேகானந்தரின் பொன்மொழி. ஒருவர் எவ்வளவு துன்பம் தரக் கூடிய வன் சொற்களைக் கூறினாலும் அவரிடம் இனிய வார்த்தைகளையே கூற வேண்டும். இன்சொற்களை பேசுகின்ற ஒருவர் மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை வாழ்வார். சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்தைப் பெறுவார்.

**பாடச் சுருக்கம்**

- கடவுளின் படைப்புகளில் மனிதனே மேலான படைப்பாகும்.
- மனக்கட்டுப்பாடு பெற்ற மனிதன் வாழ்க்கையில் வெற்றி பெறுகிறான்.
- மாசற்ற மனம் நல்ல சொல் ஊற்றெடுப்பதற்குச் சிறந்தொரு அடித்தளமாகும்.
- பேச்சின் உயிர் நாடியாக அமைவது இனியவை கூறலாகும்.
- இன்சொற்களைப் பேசுகின்ற ஒருவர் மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை வாழ்வார்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக

1. மனித வாழ்க்கையை மேம்படுத்தும் மனித விழுமியங்கள் நான்கு தருக.
2. மனவடக்கம் ஏன் அவசியமானது?
3. இனியவை கூறல் என்பது யாது?
4. ஒருவரின் வெற்றிகரமான வாழ்விற்கு அவசியமானவை எவை?

## செயற்பாடு

1. மனித வாழ்க்கைக்கு அவசியமான மனித விழுமியங்களைப் பட்டியற்படுத்துக.

2. திருக்குறளின் இனியவை கூறல் எனும் அதிகாரத்தினை எழுதிக் காட்சிப்படுத்துக.

3. ''இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந்தறு'' என்ற குலத்தவர் கூறும் கருத்தை விளக்கி எழுதுக.

## (இ) சூழலைப் பேணுதல்



மனித வாழ்க்கையில் சூழல் என்பது முக்கியமானதொன்றாகும். ஒரு மனிதன் நல்லவனாகவோ தீயவனாகவோ வாழ்வதில் சூழல் முக்கிய இடம் வகிக்கின்றது. நாம் தினசரி காணும் காட்சிகள், உரையாடல்கள், வானொலி, தொலைக்காட்சி ஆகியன நமது நடத்தைகளில் மாற்றங்களை உருவாக்குகின்றன.

நல்ல நூல்கள், நல்ல சுற்றம், நல்ல நண்பர்கள் போன்ற காரணிகள் மனித நடத்தைகளில் முன்மாதிரி-களாகவும், மனித வாழ்க்கையை மேம்படுத்துவனவாகவும் அமைகின்றன. நல்ல நண்பர்களின் சேர்க்கையால் பலர் தமது கெட்ட பழக்க வழக்கங்களிலிருந்து விடுபட்டுத் திருந்தி உள்ளனர். வாழ்க்கையில் புது ஒளி பெற்று முன்னேறியுள்ளனர்.

பௌதிக சூழலானது மனிதர்களின் கவனமின்மையினாலும் பொறுமையின்மையினாலும் சீரழிகின்றது எனலாம். சமூகச் சூழல் மனிதர்களால் இன்று அதிகமாக மாசுப்படுத்தப்படுகின்றது. சூழல் மாசடைவதனால் எமது மனம் மாசடைகின்றது. எமது உடலில் நோய் தொற்ற வாய்ப்பு ஏற்படுகின்றது. மனிதர்களின் உடலில் ஏற்படுகின்ற நோய்களுக்கு எவ்வாறு நாம் மருந்துகளை உபயோகிக்கின்றோமோ அவ்வாறே தீய காரியங்களினால், தீய நட்பினால் நமக்கு ஏற்படக் கூடிய பாதிப்புக்களை தடுப்பதற்காக நல்ல நூல்களையும், சிந்தனைகளையும் தேடியறிய வேண்டும். உடலின் வளர்ச்சிக்கு நல்ல உணவு எவ்வாறு அவசியமோ அவ்வாறே நல்ல சிந்தனை வளர்ச்சிக்கு நல்ல மனிதர்களினது வழிகாட்டல் அவசியம்.

குருவிடமிருந்து கல்வி பெறப்படுகின்றது. அந்த குரு ஆசிரியனாக இருக்கலாம். பெற்றார், சுற்றத்தினர், நண்பர்கள், சகபாடிகள், பெரியார்களாகவும் இருக்கலாம் அல்லது திரைப்படம், தொலைக்காட்சி, செய்தித்தாள் போன்ற தொடர்பு சாதனங்களாகவும் இருக்கலாம். கதை, நாவல் போன்ற நூல்களாகவும் விளங்கலாம். அவை யாவுமே மனிதர்களுக்கு அனுபவம், தகவல், அறிவுரைகளை வழங்கி அவர்களின் அறிவு, திறன், மனப்பாங்கு சார்ந்த மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. நாம் கற்கும் கல்வியானது நீண்ட காலம் நின்று நிலைப்பதனால் மகிழ்ச்சியானதாக அமைதல் வேண்டும். ஆனால் தீய மாற்றங்களை ஏற்படுத்துமானால் முழு வாழ்க்கையும் பாழ்பட்டு விடும். எனவே நாம் வாழும் சுற்றுப் புறமும் சூழ்நிலையும் சுத்தமானதாகவும், தூய்மையுடையதாகவும் இருத்தல் அவசியம்.

## (ஈ) பொதுச் சொத்துக்களைப் பேணி பாதுகாத்தல்

மனிதனின் வாழ்க்கையானது அமைதியானதாகவும், நாகரிகமான ஒன்றாகவும் அமைய வேண்டுமாயின் பொது வசதிகள் நிறைந்த சூழல் காணப்படல் அவசியம். அந்தவகையில் நமக்கும் பிறருக்கும் நன்மை பயக்கும் வகையில் அரசாங்கத்தாலும் சமூகத்தாலும் பொது நிறுவனங்களாலும் உருவாக்கப்பட்டுள்ள அசையும் அசையாச் சொத்துக்கள் பொதுச் சொத்துக்கள் எனலாம்.

இவற்றில் பொதுச் சொத்துக்களாயுள்ளவற்றை உரிய முறையில் பயன்படுத்துவது நாட்டின் ஒவ்வொரு பிரசையினதும் தலையாய கடமையாகும். அடுத்த தலைமுறை அவற்றை பயன்படுத்தும் வகையில் கையளித்தல் முக்கியமாகும். ஏனெனில் பொதுச் சொத்துக்கள் நாட்டின் செல்வங்களாகும்.

பொதுச் சொத்துக்களின் மீது ஒவ்வொருவருக்கும் தனித்தனியாகவும் அதே நேரத்தில் கூட்டாகவும் பொறுப்புக்கள் உள்ளன. அவற்றை சிறந்த முறையில் பேணிப்பாதுகாப்பதன் ஊடாக சிறந்த சேவையினை நாம் அனைவரும் பெற்றுக் கொள்ளக் கூடியதாக இருக்கும். அத்துடன் காலதாமதம் ஏற்படுதலைத் தவிர்க்கப்படும் பொது சுகாதாரம், சூழல் மாசடைதலைத் தடுத்தல் சமூக அமைதி, நாகரிமான வாழ்க்கை முறை, அழகுணர்வு போன்றவைகள் மக்கள் மத்தியிலும் சமூகத்திலும் ஏற்படவும் வாய்ப்புக்கள் அதிகரிக்கும்.

பொதுச் சொத்துக்களைத் தகாத முறையில் பயன்படுத்துதல் சட்டரீதியான குற்றமாவதுடன் மனித நாகரிகத்திற்கு முரண்பட்ட செயலாகும். அவை பாரிய பொருட் செலவினைக் கொண்டாதாக இருப்பதனால் அவற்றின் பொருத்தமற்ற பயன்பாடானது நாட்டின் பொருளாதார சீர்குலைவையும் ஏற்படுத்தும்.

எனவே, பொதுச் சொத்துக்களை உரிய முறையில் பேணிப்பாதுகாப்பதால் நீண்ட காலத்திற்கு அவற்றை பயன்படுத்தக் கூடியதாக இருக்கும். அடுத்த தலைமுறையினரும் பயன்படுத்தும் வகையில் அவற்றைப் பொறுப்புடன் கையாளுவோம்.

## பாடச் சுருக்கம்

- மனிதனின் வளர்ச்சியில் சூழல் முக்கிய பங்கு வகிக்கின்றது.
- நல்ல சூழல் மனிதனை மேம்பாடடையச் செய்கிறது.
- நல்ல கல்வி மனித நடத்தைகளைத் தீர்மானிக்கின்றது.
- பொதுச் சொத்துக்களை சிறந்த முறையில் பேணிப்பாதுகாப்பது நமது கடமை.
- அடுத்த தலைமுறையினருக்கு பொது சொத்துக்களைச் சிறந்த முறையில் கையளிக்க வேண்டும்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. நல்ல சூழல் மனிதனின் வளர்ச்சிக்கு ஏன் அவசியமாகின்றது?
2. மோசமான பழக்கவழக்கம் உள்ள நண்பருக்கு நீர் கூறும் ஆலோசனைகள் 4 தருக.
4. பொதுச் சொத்துக்களை சிறந்த முறையில் பயன்படுத்துவதற்கான ஆலோசனைகள் 3 தருக.
5. பொதுச் சொத்துக்களாக நீர் அறிந்தவை 5 தருக.

## செயற்பாடு

1. பொதுச் சொத்துக்களைச் சிறந்த முறையில் பயன்படுத்துவது தொடர்பாக இருவரிடையே இடம்பெற்ற கலந்துரையாடல் ஒன்றினை உரையாடல் வடிவில் எழுதுக.
2. ''நல்ல நூல்கள் நல்ல நண்பர்கள்'' எனும் தலைப்பில் 5 நிமிட பேச்சு ஒன்றினைப் பேசிக்காட்டுக.

## உ. தான தருமம்

இறைவன் மீது பக்தி கொண்ட அடியார்கள் யாவரும் இறைவன் மீது கொண்டுள்ள அன்பைப் போல ஏனைய உயிர்களிடத்தும் நேயமாக இருக்க வேண்டும். அத்தகைய வெளிப்பாட்டு அம்சங்களுள் ஒன்றாக அமையப் பெறுவது தான தருமமாகும். எளிய வாழ்க்கையிலேயே மகிழ்ச்சியைக் காணமுடியும். இத்தகைய வாழ்க்கையைப் பெறுவதற்கு இறையுணர்வுடன் கூடிய தான தருமங்களைச் செய்து வருவது சிறந்ததாகும்.

யாகங்கள், ஹோமங்கள் செய்யும் போது அவரவர்கள் மனமுவந்து தானங்கள் செய்வது சாஸ்திர விதி. அந்த வகையில் தானங்கள் அன்னதானம், வஸ்திர தானம், பூமிதானம், கோதானம், தீபதானம், அரிசிதானம், பால்தானம் போன்ற பல்வேறு தானங்கள் உண்டு. இவ்வாறு தகுதியறிந்து செய்யும் தானங்களால் எமக்குப் பல புண்ணிய பலன்கள் கிடைக்கின்றன.

தருமம் என்பது ஆசாரம் அல்லது வாழ்க்கையின் ஒழுங்கு. அதுவே தருமம். நம் ஒழுக்கங்களுக்கு அடிப்படை செல்வம், அழகு, நீண்ட ஆயுள், சந்ததிவிருத்தி முதலான நன்மைகளை இறைவன் அளிப்பான். வேதங்களில் மனித இனத்தின் சிறந்த இலட்சியமாக தர்மத்திற்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே, கடவுளை அடைய சிறந்த வழியாக புண்ணியங்களின் வழியிலேயே செல்ல வேண்டும் என்பது எமது தலையாய கடமையாகும்.

தம்மில் உயர்ந்தோரால் மதிக்கப்படும் ஒருவரைப் பிரதி செய்து, மதிப்போடு வழங்கப்படும் தானம் தெய்வீகமானது. நீங்கள் முனிவர்கள் துறவிகள், பிராமனர் முதலியோருக்கு தானம் வழங்குங்கள்.

மனிதன் அமைதியாக வாழ வேண்டுமானால் அவன் எப்பொழுதும் தன்னை அறச் செயல்களில் ஈடுபடுத்திக் கொள்வதோடு தர்மத்துக்கு தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளவும் வேண்டும். அப்பொழுது தான் உலகமும் அமைதியை அனுபவிக்க முடியும். அறவழியில் அல்லாது வேறு எந்த வழியிலும் மன அமைதியையும் இறைவனின் திருவருளையும் பெற முடியாது. மனித குலத்தின் நன்மைக்கு தர்மமே ஆதாரம். தர்மத்தின் ஒளி மனித வாழ்வை ஒளி பெறச் செய்யாவிடின்; மக்கள் துன்பம் எனும் இருளால் சூழப்படுவர்.

ஏழை எளியவர்கள், நோயாளிகளுக்கு கொடுங்கள். அங்கவீனர்கள், கதியற்றவர்கள், விதவைகளுக்கு உதவுங்கள். மரியாதை, அடக்கம், மனவெழுச்சியோடு தான தருமம் செய்யுங்கள். பிறருக்குத் தருமம் செய்ய வாய்ப்பு கிடைத்ததற்காக ஆனந்தமடையுங்கள், நன்றி செலுத்துங்கள். சரியான மனநிறைவோடு தான தருமம் செய்வதால் கடவுளை அடையலாம்.

## பாடச் சுருக்கம்

- எல்லா உயிர்களிடத்திலும் அன்பு கொள்ள வேண்டும்.
- தானங்கள் பல வகைப்படும்.
- கடவுளை அடைய புண்ணியங்களின் வழி செல்லல் வேண்டும்.
- எளியவர்களுக்கு உதவ கிடைத்தமைக்காக ஆனந்தமடையுங்கள்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடையெழுதுக.

1. தானம் எனப்படுவது யாது?
2. தானங்கள் மூன்றினை எழுதுங்கள்
3. தானம் செய்ய வேண்டியதன் அவசியங்கள் இரண்டு எழுதுக.
4. நீங்கள் தான தருமம் செய்த இரண்டு சந்தர்ப்பங்களை எழுதுக.

## செயற்பாடு

1. 'உயிர்களிடத்தில் அன்பு செலுத்துவோம்' எனும் பொருள்பட குழுவாக இணைந்து நாடகமொன்றினைத் தயாரித்து அரங்கேற்றுங்கள்.

2. 'எளியவர்களுக்கு உதவுவோம்' எனும் தலைப்பில் வில்லுப்பாட்டு ஒன்றினை ஆக்குக.

## 1.4 பிறந்தநாள் விழா

சைவ சமயத்தவர்களால் கொண்டாப்படும் வாழ்வியல் அம்சங்கள் பல உள்ளன. அவை இறை சிந்தனையுடன் வாழ்வதற்கும் மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதற்கும் சமுதாய உறவை விருத்தி செய்வதற்கும் உதவுகின்றன. வாழ்வியல் சடங்குகளுள் பெயர் சூட்டுதல், சோறூட்டல், ஏடு தொடக்குதல் என்பன பற்றி முன்னைய வகுப்பில் கற்றீர்கள். வருடந்தோறும் ஒருவரின் பிறந்த நட்சத்திர தினத்தன்று இறைவனை வழிபட்டு நிறைந்த கல்விப் பேற்றையும், செல்வத்தையும் நீண்ட ஆயுளையும் வேண்டி, பெற்றோரை வணங்கி ஆசிபெற்று, குடும்பத்தினருடனும், சுற்றத்தினருடனும் கொண்டாடப்படும் விழா பிறந்தநாள் விழாவாகும்.

வருடந்தோறும் கொண்டாடப்படும் பிறந்த நாள் விழாக்களை விட அறுபது, எழுபது, எழுபத்தைந்து, எண்பது வயதுகளில் கொண்டாடப்படும் பிறந்தநாள் விழாக்கள் முக்கியமானவை. இவை பற்றி சமய இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களிலும், பின்வந்த சோழர்கால இலக்கியங்களிலும் மக்களும் மன்னர்களும் தத்தமது பிறந்த நாள் விழாக்களைக் கொண்டாடியதை அறிய முடிகின்றது. சோழப் பெருமன்னனான இராஜராஜன் தனது பிறந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடியதோடு, கோயில்களுக்கு மானியங்கள் வழங்கியதாக அக்காலக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

நம் ஒவ்வொருவர் வாழ்விலும் பிறந்தநாள் என்பது முக்கியமான தொன்றாகும். பிறந்தநாளில் நாம் முதலில் நீராடி, புத்தாடை அணிவோம். வீட்டில் சுவாமி படங்களின் முன் விளக்கேற்றி, திருமுறைகள் ஓதி இறைவனை வழிபடுவோம். பின் கல்வி, செல்வம், நோயற்ற வாழ்வு, முதலானவற்றைத் தந்து, நல்லவர்களாக வாழ வைக்க வேண்டும் என இறைவனைப் பிரார்த்தனை செய்வோம்.

மாலையில் விளக்கேற்றி, பொங்கலைப் படைத்து இறைவனை வழிபடுவோம். சுவாமிக்குப் படைத்த பொங்கலைப் பெற்றோர், பிறந்த நாளைக் கொண்டாடுபவருக்கு ஊட்டுவர். பிறந்த நாளில் இறைவனை வணங்கி அருள் பெற்றதைப் போன்று வீட்டில் உள்ள தாய், தந்தை, பெரியோர்களை வணங்கி, அவர்களது ஆசியைப் பெற்றுக் கொளவோம். அவ்வேளை உறவினர் ஆராத்தி எடுப்பர், அதனைத் தொடர்ந்து நண்பர் உறவினருக்கு பொங்கல், வடை, மோதகம் போன்ற சிற்றூண்டிகளைக் கொடுத்து உண்டு மகிழ்வோம். பிறந்த நாளைக் கொண்டாடுபவருக்குப் அன்று விசேட பரிசுப் பொருட்களை வழங்கி வாழ்த்துக் கூறுவர். பிறந்த நாள் விழாவின்போது மங்கள வாத்தியங்களை இசைத்து மகிழ்வோம். நண்பர்கள், உறவினர்களோடு ஆடியும் பாடியும் குதுகலிப்போம்.

பிறந்த நாள் விழா கொண்டாடுவதனால் பல நற்பண்புகள் வளர்க்கப்படுகின்றன. உற்றார், உறவினர், நண்பர்கள், அயலவர்கள் ஆகியோர்களுடன் உணவைப் பகிர்ந்து உண்ணுதல், சிற்றுண்டிகள் வழங்குதல் என்பன இடம்பெறும். இவை கட்டாயம் செய்யப்பட வேண்டும். முதியோர் இல்லம், சிறுவர் பராமரிப்பு இல்லம் முதலான இடங்களுக்குச் சென்று, அங்குள்ளவர்களுக்கு உதவி செய்தல், உணவு வழங்குதல் முதலான செயல்களைச் செய்வோம். ஏழைகள், அநாதைகள் என்போருக்கு உணவு, உடை வழங்குதல் முதலான தான தருமப் பணிகளிலும் ஈடுபடுவோம்.

பிறந்த நாள் விழாவைக் கொண்டாடும்போது, நாம் தவிர்த்து கொள்ள வேண்டிய விடயங்கள் பல உள்ளன. முதலில் வீண் ஆடம்பரங்களைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும். அத்துடன் தீபத்தை வாயால் ஊதி அணைத்தல் எமது பண்பாட்டு நிலைபாட்டுக்கு ஏற்றதல்ல என்பதால், அதனைத் தவிர்த்து விளக்கேற்றிக் கொண்டாடும் ஒழுக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அன்றைய தினத்தைப் புனித நாளாகக் கருதி மாமிச உணவுகளைத் தவிர்த்தல் வேண்டும்.

இவ்வுலகில் நாம் பிறந்த பயனை நினைவு கூர்வதற்கும், அதனை மேலும் வளர்த்துச் செல்வதற்கும் பிறந்தநாள் விழா உந்துசக்தியாக அமைகின்றது. அதனால் அவ்விழாவைச் சைவ மரபிற்கு அமையக் கொண்டாடுவோம்.

பாடச் சுருக்கம்

- வாழ்வியல் சடங்குகள் மக்கள் இறைசிந்தனையுடன் வாழ்வதற்கும், மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதற்கும், சமுதாயத்தில் உறவுகளை வளர்த்துச் செல்லவும் உதவுகின்றன.

- சைவசமயத்தவர்கள் வருடந்தோறும் பிறந்த நட்சத்திரத்தில் பிறந்த நாளைக் கொண்டாடுவர்.

- பிறந்த நாள் கொண்டாட்டத்தின் போது செய்ய வேண்டிய கடமைகளில் இறைவழிபாடு முதன்மையானது.

- பிறந்த நாள் கொண்டாட்டத்தின் போது தான தருமப் பணிகளில் ஈடுபடுதல் வேண்டும்.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. வாழ்வியல் சடங்குகளில் நான்கினைக் குறிப்பிடுக.
2. பிறந்த நாள் விழா என்றால் என்ன?
3. சைவ சமயத்தவர்கள் கொண்டாடும் பிறந்த நாள் விழா மூலம் வளர்க்கப்படும் நற்பண்புகள் நான்கு தருக.
4. உங்களது பிறந்த நாள் விழாவின் போது தவிர்க்க நினைக்கும் செயல்கள் மூன்றினைத் தருக.

### செயற்பாடு

- சைவ முறைப்படி கொண்டாடிய பிறந்தநாள் விழாவைப் பார்வையிட்டு அவற்றை அறிக்கையாக்கி வகுப்பறையில் சமர்ப்பிக்க.

## 1.5 பண்டிகைகள்

பண்டிகை என்ற சொல் பெருநாள், விசேட நாள் என்னும் பொருளைத் தரும். சமயம் சார்ந்தும், சமூகம் சார்ந்தும் பல்வேறு வழிபாடுகள், விருந்துகளுடன் கொண்டாடப்படுவது பண்டிகையாகும். பண்டிகைகள் தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் நன்மைகளைத் தருகின்றன.

பண்டிகை நாட்களில் மக்கள் அதிகாலையில் எழுந்து, நீராடி புத்தாடை அணிவர். அதன் பின்னர் ஆலயங்களுக்குச் சென்று வழிபடுவர். பண்டிகை நாட்களின் போது விசேட உணவு வகைகளைத் தயாரித்து, உற்றார் உறவினருக்கும் ஏழைகளுக்கும் பகிர்ந்தளிப்பர்.

தொழில் காரணமாகத் தூர இடங்களில் வசிப்பவர்கள் தங்கள் சொந்த ஊர்களுக்குச் சென்று தங்கள் குடும்பத்தினருடனும் உறவினர்களுடனும் பண்டிகையைக் கொண்டாடுவர்.

உறவினரின் இல்லங்களுக்குச் சென்று வாழ்த்துக் கூறல், அளவளாவி மகிழ்தல், உற்றார் உறவினரிடையே இருந்த மனக்கசப்பு, பகைமை என்பவற்றை மறந்து, மன்னித்து உறவுகளைப் புதுபித்துக் கொள்ளல் என்பன பண்டிகைக் காலங்களில் காணக்கூடிய சிறப்பான பண்புகளாகும்.

பண்டிகைகள் குடும்ப அங்கத்தவர்களிடையே நெருக்கத்தையும் அன்புப் பிணைப்பையும் ஏற்படுத்துகின்றன. மக்களை ஒருவரோடு ஒருவர் இணைந்து வாழப் பழக்குகின்றன. பொது நலத்தைப் பேணவும் மற்றவர்களுக்கு உதவவும் வழிகாட்டுகின்றன. சமுதாய நன்மைக்கும், தனிமனித மேம்பாட்டுக்கும் உதவும் இனிய பண்புகளை வளர்ப்பதில் பண்டிகைகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.

### ஓணம் பண்டிகை

பண்டிகையின் பல்வேறு சிறப்பம்சங்களையும் அறிந்து கொண்ட நாம், சைவ சமயத்தவர்கள் கொண்டாடும் பண்டிகைகளில் ஒன்றான ஓணம் பண்டிகை பற்றி இங்கு கற்போம்.

ஆவணி மாதத்துப் பூரணையுடன் கூடிய திருவோண நட்சத்திரத்தில் ஓணம் பண்டிகை கொண்டாடப்படுகின்றது. ஓண நட்சத்திரம் திருமாலுக்குரிய விசேட நட்சத்திரமாயினும், எவ்வித வேறுபாடுமின்றிச் சைவ சமயத்தவர்களாலும் கொண்டாடப்படுகின்றது.



3. S. P. C. 120303

ஆவணி மாதத் திருவோண நட்சத்திரம் நடராஜப் பெருமானுக்குரிய விசேட அபிடேகத் தினங்களில் ஒன்றாகும். கொழும்பிலுள்ள பொன்னம்பலவாணேச்சர ஆலயத்தில் இந்த அபிடேகத் தினம் சிறப்பாக அனுட்டிக்கப்படுகின்றது.

சைவர்கள் ஓணம் பண்டிகையைக் கொண்டாடினார்கள் என்பதை மேல்வரும் திருஞானசம்பந்தப் பெருமானின் தேவாரம் மூலம் அறியலாம்.

மைப்பயந்த ஒண்கண் மட நல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச்சர மமர்ந்தான்
ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவும் காணாதே போதியோ பூம்பாவாய்

இலங்கையில் வாழும் இந்தியப் பூர்வீகமுள்ள மக்களிடையே சிறப்பாக, மலையாளிகளிடையே ஓணம் பண்டிகை இன்றும் முக்கிய பண்டிகையாகக் கொண்டாடப்படுகின்றது. இப்பண்டிகையின்போது மலையாளத்தவர் புத்தாடை அணிவர். செல்வந்தர்கள், ஏழைகளுக்கு உணவு, உடை என்பன வழங்கி, அவர்களை மகிழ்விப்பார்கள். மலையாள ஆண்டின் தொடக்க நாள், ஓணம் நாளாகும். மலையாள மக்களுக்கு அன்றைய நாள் மிகமிகச் சிறந்த நாளாகும்.

ஓணம் பண்டிகை தொடர்பான கதை ஒன்றுண்டு. திரிவிக்கிரமரான திருமால் மூன்றடி நிலம் கேட்டு மாபலிச் சக்கரவர்த்தியை வென்று அவரது கர்வத்தை அடக்கினார். அப்போது, மாபலிச் சக்கரவர்த்தி ஒவ்வோர் ஆண்டிலும் ஆவணி திருவோண நட்சத்திரத்தன்று தனது நாட்டையும் மக்களையும் காண வேண்டும் என்று திருமாலிடம் கேட்டுக் கொண்டார். அதன் காரணமாக, மாபலிச் சக்கரவர்த்தியின் நினைவு நாளாகவும்; அவர் மக்களைக் காணவரும் நாளாகவும் ஓணம் பண்டிகை கொண்டாடப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர்.

ஓணம் என்ற சொல்லுக்கு ஆறு என்ற பொருளும் உண்டு. ''கங்கை யாதி ஓணநீர்'' என்று சேது புராணம் குறிப்பிடுகின்றது. இந்த ஓண நன்னாளில் புனித தீர்த்தத் துறைகளில் நீராடி சிவபெருமானனையும் திருமாலையும் வழிபட்டு அவர்களது அருளைப் பெறுகின்றனர்.

### பாடச் சுருக்கம்

- சமயம் சார்ந்தும், சமூகம் சார்ந்தும் பல்வேறு வழிபாடுகள், விருந்துகளுடன் கொண்டாடப்படுவது பண்டிகை எனப்படும்.
- பண்டிகை பெருநாள், விசேட நாள் என்னும் பெயர்களாலும் அழைக்கப்படும்.
- பண்டிகை மூலம் நற்பண்புகள் பல வளர்க்கப்படுகின்றது.
- சைவ சமயத்தவர்கள் கொண்டாடும் பண்டிகைகளுள் ஓணம் பண்டிகையும் ஒன்றாகும்.
- ஆவணித் திருவோண நட்சத்திரம் நடராஜப் பெருமானுக்குரிய விசேட அபிடேகத் தினமாகும்.
- ஆவணி ஓணத்தில் திருமாலுக்கு பூசைகள் மேற் கொள்ளப்படுகின்றது.
- மலையாள மக்களின் பண்டிகை நாளாகவும், மலையாள ஆண்டின் தொடக்க நாளாகவும் ஓண நன்னாள் அமைகின்றது.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. பண்டிகை என்றால் என்ன?
2. பண்டிகை என்பதன் மறுபெயர்கள் இரண்டு எழுதுக.
3. ''சைவ சமயத்தவர்கள் ஓணம் பண்டிகையைக் கொண்டாடினார்கள்'' என்பதற்கு நீங்கள் கூறும் ஆதாரம் யாது?
4. ஓணம் பண்டிகையுடன் தொடர்புடைய கதையை எழுதுக.

### செயற்பாடு

- பண்டிகை நாளில் நீங்கள் செய்யும் செயல்களை படிமுறையாக எழுதுக.
- ''பண்டிகை நாளில் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கின்றீர்கள்'' இதற்கான காரணங்களை விளக்கமாக எழுதுங்கள்.

## 1.6 விரதங்கள்

விரதங்கள் மக்களுக்குத் தெய்வ நம்பிக்கையை ஏற்படுத்தியும் மனவலிமையைக் கொடுத்தும் அவர்கள் வாழ்வில் மகிழ்ச்சியை உண்டாக்குகின்றன. விரதங்களை அநுட்டிப்பதனால் ஒருவரது வாழ்வில் தன்னம்பிக்கை, பணிவு, பக்தி, துணிவு, அன்பு, கருணை என்பன ஏற்படுவதுடன் ஒழுக்கம், நேர்மை போன்ற குணங்களும் விருத்தியடைகின்றன.

ஒவ்வொரு விரதங்களுக்குமெனச் சிறப்பான பூசை முறைகள், வழிபாட்டு முறைகள், உணவுக்கட்டுப்பாடுகள் என்பன காணப்படுகின்றன. விரதங்களை அனுட்டிப்பதற்குப் பொதுவான விதிமுறைகளாக அதிகாலையில் துயிலெழுதல், நீராடுதல், தோய்த்துலர்ந்த ஆடை அணிதல், காலை மாலை இறைவழிபாடு செய்தல், ஆலய வழிபாடு செய்தல், தோத்திரப் பாடல்களை ஓதுதல் உணவை குறைத்தல் அல்லது தவிர்த்தல் போன்றவை பிரதானமாகும்.

நாம் சில விரதங்களையும் அவற்றை அநுட்டிக்கும் முறைகளையும், அவற்றினால் ஏற்படும் பயன்கள் என்பனவற்றையும் பற்றி விரிவாகக் கற்போம்.

### ஆவணி ஞாயிறு

ஆவணி மாத விரதங்களுள் சிறப்பான விரதமாக ஆவணி ஞாயிறு விரதம் விளங்குகின்றது. ஞாயிறு என்றால் 'சூரியன்' ஆகும். சூரியன் நவக்கிரகங்களில் முதன்மையானதாக அமைந்துள்ளது. இப்பிரபஞ்சத்திற்கு ஒளியையும் வெப்பத்தையும் அளிப்பது சூரியனே. எமது சூரியபகவானை வணங்கி இந்துக்களால் இவ்விரதம் அநுட்டிக்கப்படுகின்றது.

ஆவணி மாதத்தில் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளிலும் விரதமிருந்து சூரியனை வழிபடுவர். இறுதி ஞாயிற்றுக்கிழமை சூரியனுக்குப் பொங்கல் செய்து படைத்து வழிபடுவதும் வழக்கமாகும். வருடத்தின் அனைத்து ஞாயிற்றுக் கிழமைகளிலும் விரதம் அநுட்டிக்க முடியாவிடினும் ஆவணி ஞாயிறில் மட்டுமாவது விரதமிருத்தல் சிறப்பாகும்.

சூரிய வழிபாட்டினால் நம் உடல் உறுதியாவதுடன், கண் சம்பந்தமான நோய்களும் ஏற்படாது என்பது இந்துக்களின் நம்பிக்கை.

## ஆவணிச் சதுர்த்தி

விநாயகருக்குரிய விரதங்களுள் முக்கியமான ஒன்றாக ஆவணிச் சதுர்த்தி விரதம் விளங்குகின்றது. ஒவ்வொரு மாதமும் அமாவாசையின் பின் வரும் நாலாம் நாள் சதுர்த்தியாகும். சிவனிலிருந்து வேறாகாத சக்தியாக விநாயகப்பெருமான் தோற்றம் பெற்ற தினமே ஆவணி மாதச் சதுர்த்தி ஆகும். இதனாலேயே ஏனைய மாத சதுர்த்தி தினங்களை விட விசேடமானதாக இத்தினம் கொள்ளப்படுகிறது.

கஜமுகாசுரன் என்னும் அசுரன் சிவபெருமானை எண்ணித் தவமிருந்து தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், ஆயுதங்கள் எவற்றாலும் தான் கொல்லப்படாதவாறு வரம் பெற்றான். அதன் காரணமாக தேவர்களைக் கொடுமைப்படுத்தினான். தேவர்களும் இக்கொடுமையிலிருந்து தம்மைக் காத்தருளும்படி இறைவனை வேண்டினர். இதற்கிணங்கி, கஜமுகாசுரனைக் கொன்று அவனின் கொடுமையிலிருந்து தேவர்களை விடுவிக்கும் பொருட்டு சிவபிரான் விநாயகரைத் தோற்றுவித்தார். யானை முகமும் மனித உடலும் கொண்ட விநாயகர் தோன்றிய நாளே ஆவணி மாதச் சதுர்த்தி தினமாகும். விநாயகரும் தன் வலத்தந்தத்தை ஒடித்து அதனால் அசுரனைக் கொன்றார். தேவர்கள் தம் துயர் அகற்றிய விநாயகரைச் சதுர்த்தி தினத்தில் சிறப்பாகப் போற்றி வழிபட்டார்கள்.

ஆலயங்களில் இந்நாளில் விசேட பூசை வழிபாடுகள் நடைபெறும். இத்தினத்தில் விநாயகரை இருபத்தொரு பத்திரம், இருபத்தொரு புஷ்பம், இருபத்தொரு அறுகம்புல் முதலியவற்றைக் கொண்டு அர்ச்சனை செய்தல் சிறந்த பலன் தரும். இவ்விரதத்தை அநுட்டிப்பதன் மூலம் சந்ததி விருத்தியையும் செல்வச் சிறப்பும் பெற்றுக் கொள்ளலாம். சைவ ஆலயங்களிலே ஆவணிச் சதுர்த்தித் திருவிழா பக்தி பூர்வமாக நடைபெறும்.

## புரட்டாதிச் சனி

நவக்கிரகங்களில் தனிச்சிறப்புக் கொண்டவராக சனீஸ்வரர் விளங்குகின்றார். இவர் சூரிய பகவானுக்கும் உஷாதேவிக்கும் மகனாகத் தோன்றினார் என்பது புராணக் கதை. இவர் தோற்றம் பெற்றது புரட்டாதி மாத முதற் சனிக்கிழமை ஆகும். இதனாலேயே புரட்டாதி மாத சனிக்கிழமை சனி பகவானுக்கு விசேட நாளாகக் கொள்ளப்படுகிறது.

சனீஸ்வரன் தம்மை வழிபடும் ஆன்மாக்களின் பாவங்களை நிவர்த்தி செய்து அவர்களுக்கு மகிழ்ச்சியை அருள்பவர். வருடத்தில் அனைத்துச் சனிக்கிழமைகளிலும் விரதம் அநுட்டிக்கமுடியாவிடினும் புரட்டாதி மாதச் சனிக்கிழமைகளிலாவது விரதமிருந்து வழிபடுவது நன்று. நவக்கிரகங்கள் அமைந்துள்ள கோவில்கள், சனீஸ்வரனுக்கெனத் தனியாக அமைந்த கோவில்கள் என்பவற்றில் புரட்டாதி மாதச் சனிக்கிழமைகளில் சிறப்புப் பூசை வழிபாடுகள் நடைபெறும்.

சனீஸ்வரனுக்கு பிரியமானவையாக எள்ளுத்தானியமும், கறுப்பு நிறமும் அமைந்துள்ளன. இதனாலேயே சனீஸ்வரனுக்கு கரியநிறப் பட்டாடையும், எள்ளுச் சாதத்தையும் படைப்பர். இவரின் வாகனமாக காகம் விளங்குகின்றது. அதனாலேயே இந்துக்கள் சனிக்கிழமைகளில் காகத்திற்கு உணவு படைப்பதை வழமையாகக் கொண்டுள்ளனர். அத்துடன் தாம் உண்ணும் உணவிலும் நல்லெண்ணெய், எள்ளு முதலியவற்றைச் சேர்த்துக் கொள்வார்கள்.

சனிக்கிழமைகளில் எள்ளு, கறுப்புத்துணி, நல்லெண்ணெய் ஆகியவற்றைத் தானம் செய்வதால் சனி தோசம் நீங்கும் என்பர். நல்லெண்ணெயை செப்பு பாத்திரம் ஒன்றில் எடுத்து அதில் முகத்தைப் பார்த்த பின்பு அவ்வெண்ணெயைத் தானஞ் செய்ய வேண்டும்.

எள்ளெண்ணை எரிக்கும் வழக்கம் பிரசித்தமானது. கோயில்களில் புரட்டாதி மாதச் சனிக்கிழமைகளில் கறுப்புத் துணியில் சிறிதளவு எள்ளை பொட்டலமாகக் கட்டி அதனை ஒரு சிறிய மண்சட்டியில் வைத்து நல்லெண்ணெய் விட்டு எரித்து வழிபட்டால் பாவ நிவர்த்தி ஏற்படும். பொட்டலம் முற்றாக எரிந்து நீறாவதற்கு ஏற்ற அளவுக்கு எண்ணெய் விட்டெரித்தல் வேண்டும். பொட்டலம் பாதியில் எரியாது எஞ்சுதல் கூடாது என்பர்.

## புரட்டாதி மகாளயம்

புரட்டாதி மாத அமாவாசைக்கு முன்வரும் பதினைந்து நாட்களையும் மகாளயபட்சம் என்பர். 'மகாளயம்'என்பது பெரிய இருப்பிடம் ஆகும். அதாவது, பிரிந்த ஆன்மாக்கள் (பித்ருக்கள்) ஒன்று சேருமிடம்.

நாம் மகிழ்ச்சியாக வாழத் தேவர்களையும் பித்ருக்களையும் திருப்திப்படுத்த வேண்டும். இதற்கு தேவர்களுக்காக ஹோமங்களும், பித்ருக்களுக்காக சிரார்த்தம், தர்ப்பணம் முதலியனவும் செய்யப்படுகின்றன. சிரத்தையுடன் செய்யப்படுவதே சிரார்த்தம் ஆகும். மகாளய பட்ச காலமான பதினைந்து நாட்களும் பித்ருக்களை நினைத்து அவர்களின் பொருட்டு அன்னதானம் செய்வது சிறப்பாகும். இயலாது போனால் ஒரு நாளாவது அன்னதானம் செய்வது நன்று.

நமது ஒரு வருடகாலம் பித்ருக்களுக்கு ஒரு நாளாகும். இதனால், வருடத்தில் ஒரு நாள் மட்டும் செய்யப்படும் சிரார்த்தம், தர்ப்பணம் என்பன நாம் அவர்களுக்குத் தினமும் செய்வதற்குச் சமனானதாகும் என்பர்.

சூரியன் சிம்ம, கன்னி இராசிகளிற் பிரவேசித்தவுடன் பித்ருக்கள் யமதர்மனிடம் அனுமதி பெற்று பூலோகம் வந்து மகாளய பட்சத்தின் பதினைந்து நாட்களும் தம் குடும்பத்துடன் தங்கியிருப்பர் என்பது இந்துக்களின் நம்பிக்கையாகும்.

## விநாயகர் சஷ்டி (பெருங்கதை)

விநாயகருக்குரிய விரதங்களில் முக்கியமான ஒன்றாக விநாயகர் சஷ்டி விரதம் அமைந்துள்ளது. கார்த்திகை மாதத் தேய்பிறை தொடக்கம் மார்கழி மாத வளர்பிறை சஷ்டி வரையான இருபத்தொரு நாட்கள் அநுட்டிக்கப்படும் விரதமாகும். மகாவிஷ்ணு தாம் பொய்ச்சாட்சி சொன்னதால் ஏற்பட்ட சாபத்தை, விநாயகரை வழிபட்டு நீக்கிக் கொண்ட நாளே விநாயகர் சஷ்டி ஆகும். இவ் இருபத்தொரு நாட்களையும் ''பெருங்கதை விரதம் '' என்றும் கூறுவர்.

இவ்விரதத்தின் முதல் இருபது நாட்களும் மதியம் ஒரு பொழுது மட்டும் உணவு உட்கொண்டு, இரவு வேளைகளில் பால், பழம் அருந்துவது சிறப்பாகும். இறுதி நாளான இருபத்தோராம் நாள் உபவாசம் இருந்து மறுநாள் பாரணை செய்து விரதத்தை நிறைவு செய்ய வேண்டும். இருபத்தொரு இழையாலான காப்பை (நூல்) ஆண்கள் வலக்கரத்திலும், பெண்கள் இடக்கரத்திலும் அணிந்தே விரதத்தை அநுட்டிக்க ஆரம்பிப்பது முறையாகும்.பாறணையன்று (இருபத்திரண்டாம் நாள்) காப்பை அவிழ்த்து விரதத்தை நிறைவு செய்தல் வேண்டும்.

விரத காலமான இருபத்தொரு நாட்களும் விநாயகருக்கு இளநீர், மோதகம், அவல், எள்ளுருண்டை போன்றவற்றைப் நிவேதித்து விநாயகரின் சரிதத்தைக் கூறும் பெருங்கதை, விநாயகர் புராணம் முதலிய நூல்களைப் படித்தும் கேட்டும் வழிபாடு செய்தல் வேண்டும். இந்நாட்களில் ஆலயங்களிலும் சிறப்புப் பூசை வழிபாடுகளும் இடம்பெறும். விநாயகர் சஷ்டி விரதத்தைத் தொடர்ச்சியாக இருபத்தொரு வருடங்கள் ஒருவர் அநுட்டித்தால் சிறந்த பலனைப் பெறுவர் என்பது சைவர்களின் நம்பிக்கை ஆகும். இயலாதவர்கள் ஏழு வருடங்களாவது அநுட்டிப்பது நன்று எனப்படுகிறது.

## கிருஷ்ண ஜெயந்தி

விஷ்ணுவின் பத்து அவதாரங்களில் ஒன்றான கிருஷ்ண அவதார தினமே கிருஷ்ண ஜெயந்தி ஆகும். இத்தினம் கோகுலாஷ்டமி, ஜென்மாஷ்டமி, ஸ்ரீஜயந்தி எனப் பலவாறு அழைக்கப்படும். ஆவணி மாத பௌர்ணமித் திதியிலிருந்து எட்டாவது நாளான அஷ்டமி திதியே கிருஷ்ணர் பிறந்த நாளாகும். இதனால் விஷ்ணுவுக்குரிய முக்கிய விரதங்களில் ஒன்றாக இதுவும் விளங்குகின்றது.

விஷ்ணுவின் தசாவதாரங்களில் ஒன்பதாவது அவதாரமாக விளங்குவது கிருஷ்ணாவதாரம் ஆகும். இவ் அவதாரத்தின் அடிப்படைக் காரணங்களாக கம்சன் எனும் கொடுங்கோல் அரசனை அழித்தல், பாரதப்போரை நடத்தி தர்மத்தை நிலைநாட்டுதல், உலகிற்கு பகவத்கீதை என்ற அறநூலைக் கொடுத்தல் என்பன அமைகின்றன.

கிருஷ்ணன் கம்சரின் தங்கையான தேவகிக்கும் வாசுதேவருக்கும் மகனாக மதுராவில் அவதரித்து இருந்த போதும் கம்சனின் கொடுமைக்கு அஞ்சி, யசோதை - நந்தகோபன் தம்பதியரால் கோகுலத்தில் வளர்க்கப்பட்டார். அஷ்டமி திதியில் பிறந்து கோகுலத்தில் வளர்ந்தமையால் அத்தினம் கோகுலாஷ்டமி என்றழைக்கப்படுகின்றது.

இந்துக்கள் கிருஷ்ண ஜெயந்தி தினத்தை விஷ்ணு ஆலயங்களில் மட்டுமல்லாது வீடுகளிலும் சிறப்பாகக் கொண்டாடுவர். அன்றைய தினம் இல்லங்களைத் தூய்மைப்படுத்தி அலங்கரித்து, வீட்டின் முன்பக்க வாசலில் இருந்து பூஜையறை வரை சிறு குழந்தையின் காலடி அடையாளங்களை உள்ளே செல்வது போன்று மாவினால் கோலம் இடுவார்கள். அன்றைய தினம் காலையில் விரதமிருந்து, இரவில் கண்விழித்து, நள்ளிரவு பூசை செய்து வழிபடுவார்கள். விஷ்ணுவுக்குரிய பாடல்களைப் பாடுவதும் புராணங்களைப் படிப்பதும் வழிபாட்டில் அடங்கும்.

கிருஷ்ண ஜெயந்தியை முறைப்படி அநுட்டித்தால் அஸ்வமேத யாகம் செய்ததற்கான பலன் கிடைக்கும். அத்துடன் நாம் செய்த பாவங்களை நீக்கி புண்ணியத்தை அளிக்கும் விரதமாகவும் இது விளங்குகின்றது.

## பிரதோஷ விரதம்

சிவபெருமானுக்குரிய விரதங்களுள் பிரதோஷ விரதமும் ஒன்றாகும். ஒவ்வொரு மாதத்திலும் வரும் வளர்பிறையாகிய சுக்கில பட்சத்திலும், தேய்பிறையான கிருஷ்ண பட்சத்திலும் வரும் பதின்மூன்றாம் நாளே பிரதோஷமாகும். இந்த நாளில் விரதமிருந்தால் முற்பிறப்பில் செய்த பாவங்கள் நீங்கும் என்பர்.

அமிர்தம் தன்னை உண்பவர்களை இறவாமலிருக்கச் செய்யும் ஒரு மருந்தாகும். முன்பொருகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் அமிர்தத்தைப் பெறுவதற்காகத் திருப்பாற்கடலைக் கடைந்தனர். இதற்கு மந்தர மலையை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும் கொண்டார்கள். தேவர்கள் வாசுகிப்பாம்பின் வாலையும் அசுரர்கள் தலையையும் பிடித்து நின்று கடைந்தனர். இரு பகுதியினரும் அமிர்தத்தைப் பெறும் ஆசையில் வேகமாகக் கடைந்த காரணத்தால் ஏற்பட்ட வலியால் வாசுகிப் பாம்பு நஞ்சைக் (ஆலம்) கக்கியது. பாற்கடல் நஞ்சாகியது. அதிலிருந்து ஆலகால விடம் தோன்றியது.

அது மிகுந்த வெப்பத்தோடு உலகையே அழித்து விடுவது போன்று அவர்களை விரட்டியது. அதன் தாக்கத்தில் இருந்து தப்புவதற்காகத் தேவர்களும் அசுரர்களும் வலமாகவும், இடமாகவும் சிதறி ஓடிச் சிவபிரானிடம் தஞ்சமடைந்தனர். இறைவனும் ஆலாலசுந்தரர் மூலமாக அந்த நஞ்சைப் பெற்று,

தேவர்களையும் அசுரர்களையும் காத்தற் பொருட்டுத் தாமே உட்கொண்டார். இதனைக் கண்ட உமையம்மை அச்சமடைந்து சிவனின் கண்டத்தை சிறிது அழுத்தி நஞ்சு உட்செல்லாமல் தடுத்தார். நஞ்சு அப்படியே அவர் தொண்டையில் தங்கிக் கொண்டது. அதனால் இறைவனின் கண்டம் நீலநிறமாகியது. கண்டம் நீல நிறமாக மாறியமையால் இறைவன் திருநீலகண்டர் எனப் பெயர் பெற்றார்.

இந்நிகழ்வின் பின்னர் இறைவனின் ஆணைப்படி தேவர்களும் அசுரர்களும் மீண்டும் திருப்பாற் கடலைக் கடைந்தனர். பாற்கடலிலிருந்து இலக்ஷ்மி, ஐராவதம், காமதேனு, கற்பகதரு முதலியன தோன்றின. அவற்றில் இலக்ஷ்மியை திருமாலும், ஐராவதத்தை இந்திரனும், காமதேனுவை வசிட்டரும் ஏற்றுக் கொண்டார்கள். இடைவிடாமல் அவர்கள் ஏகாதசி அன்று முழுவதும் கடைந்தார்கள். அதன் பலனாக துவாதசியில் அமிர்தம் தோன்றியது. தேவர்களும் முனிவர்களும் அதனைப் பகிர்ந்து உண்டார்கள். இதன் காரணமாக தோன்றிய மகிழ்ச்சியால் துவாதசியன்று இறைவனை மறந்து ஆடிப்பாடிப் பொழுதைக் களித்தார்கள்.

பதின்மூன்றாம் நாளான திரியோதசி தினத்தில் தம் பிழைகளை உணர்ந்து கொண்ட அவர்கள் அதற்காக சிவனிடம் மன்னிப்பு வேண்டி வழிபட்டனர். சிவனும் அவர்களை மன்னித்து, அவர்களுக்கு அருள் பாலிக்கும் வண்ணமாக அன்று மாலை பிரதோஷ வேளையில் (4.30 மணிமுதல் 6 மணிவரை) நந்திதேவரின் இரு கொம்புகளுக்கு இடையில் நின்று திருநடனம் புரிந்தார். சிவனின் அத்திருநடனத்தை அனைவரும் கண்டு வணங்கி அருள் பெற்றனர்.

இப்பிரதோஷ நாளில் காலை தொடங்கி விரதம் அநுட்டித்து மாலையில் பிரதோஷ வேளையில் சிவாலயம் சென்று வழிபாடு செய்தல் வேண்டும். இத்தினத்தில் வழிபாடு செய்வதற்கென தனி விதிமுறையுண்டு. அதாவது, சிவாலயம் சென்று நந்திதேவரை முதலில் வணங்கி அங்கிருந்து இடப்பக்கம் சென்று சண்டேசுவரைத் தரிசித்துப் பின் திரும்பி வந்து மீண்டும் நந்திதேவரை வணங்கி, வலப்பக்கமாகக் கோமுகி வரை சென்று மீண்டும் திரும்பி வந்து நந்திதேவரை வணங்கி மறுபடி இடப்பக்கமாகச் சென்று சண்டேசுவரை வணங்கி திரும்பி வலப்பக்கமாக கோமுகி வரை சென்று (நந்தி தேவரை தரிசிக்கக் கூடாது) அங்கிருந்து மறுபடி நந்திதேவரை வணங்காமல் இடப்பக்கமாக சண்டேசுவரை வணங்கி திரும்பி வந்து நந்திதேவரை வணங்கி, அவரின் இரு கொம்புகளின் இடை வெளியூடாகச் சிவலிங்கத்தைப் பார்த்து வணங்குதல் வேண்டும். இந்த நாளில் விரதமிருந்து வழிபாடு செய்வோர் கோமுகியைத் தாண்டிச் செல்லுதல் கூடாது.

இப்பிரதோஷ விரத நாளில் முறைப்படி விரதமிருந்து மெய்யன்புடன் சிவவழிபாடு செய்தால் கடன், வறுமை, நோய், பாவம் முதலியன நீங்கி மகிழ்வுடன் வாழலாம். என்பது சைவ மக்களின் தளராத நம்பிக்கை ஆகும்.

### பாடச் சுருக்கம்

- விரதங்கள் பக்தியையும் மனவலிமையையும் உருவாக்குகின்றன.
- விரதங்கள் முறைப்படி அநுட்டித்தல் வேண்டும்.
- விரதம் அநுட்டிப்பதால் பல பயன்கள் கிடைக்கின்றன.
- நாம் மகிழ்ச்சியாக வாழத் தேவர்களையும் பிதிர்களையும் திருப்திப்படுத்த வேண்டும்.
- விரத காலங்களில் இறைவனை மெய்யன்புடன் வழிபடல் வேண்டும்.

### பயிற்சிகள்

01. பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. விரதத்தின் நோக்கம் யாது?
2. விரதங்களை அநுட்டிப்பதற்குரிய விதிமுறைகள் யாவை?
3. விநாயகர் சஷ்டி அநுட்டித்தலின் நியதிகள் யாவை?
4. புரட்டாதிச் சனி விரதம் அநுட்டிப்பதனால் ஏற்படும் பயன்கள் இரண்டு தருக.
5. பிரதோஷ விரத நாளின் விசேடம் யாது?

02. தொடர்புபடுத்துக

| | |
|---|---|
| ஆவணி ஞாயிறு | பெரிய இருப்பிடம் |
| புரட்டாதிச் சனி | சூரியன் |
| புரட்டாதி மகாளயம் | பாற்கடல் |
| கிருஷ்ண ஜெயந்தி | கோகுலாஷ்டமி |
| பிரதோச விரதம் | கறுப்புத்துணி |

### செயற்பாடு

புரட்டாதிச்சனி விரதத்தை அநுட்டிக்கும் ஒழுங்குமுறைகளை அட்டவணைப்படுத்துக.

## 2.1 மங்கையர்க்கரசியார்


மங்கையர்க்கரசியார்

சைவசமய பக்தி நெறியில் நின்று சிவபெருமானுக்கும் சிவ அடியார்களுக்கும் தொண்டு செய்து, முத்தி அடைந்த நாயன்மார் அறுபத்துமூவராவர். அவர்களது வரலாற்றினைக் கூறும் நூல் பெரியபுராணம் ஆகும். அதனைப் பாடியவர் சேக்கிழார். அந்நூல் பக்திச் சுவை கொண்டது. பெரியபுராணத்தில் பல பெண் அடியார்கள் போற்றப்பட்டுள்ளனர். அவர்களுள் மங்கையர்க்கரசியாரும் ஒருவர்.

மங்கையர்க்கரசியாரை, ஞானசம்பந்தப் பெருமான் தமது பதிகத்தில் ''வரிவளைக் கைம்மடமானி....'' என்று போற்றியுள்ளார். சேக்கிழார் பெருமான், ''மங்கையர்க்குத் தனி அரசி எங்கள் தெய்வம்'' என்று பெரியபுராணத்தில் பாடியுள்ளார். இத்தகைய சிறப்புகளுடன் இறை நம்பிக்கை, சைவசமய நம்பிக்கை, நற்பண்புகள் என்பனவும் மங்கையர்க்கரசியாரிடம் காணப்பட்டன. அவை அவரைத் தனித்துவம் மிக்கவராக சைவப்பணிகள் செய்ய உதவின. நாமும் மங்கையர்க்கரசியாரின் சைவப்பணிகளைப் பின்பற்றி சமயத்துக்கும் சமூகத்துக்கும் தொண்டாற்றி, நல்ல சைவசமயிகளாக வாழ்வோம்.

மங்கையர்க்கரசியார் மணிமுடிச் சோழனின் மகள் ஆவார்; 'மானி' என்னும் இயற்பெயரைக் கொண்டவர். தந்தையைப் போன்று சிவப்பணியில் ஈடுபாடு கொண்டவர்; சிவபக்தியிலும் அடியார் பக்தியிலும் சிறந்து விளங்கியவர். அவர் இளமையிலே சகல கலைகளையும் கற்று, அறிவு ஒழுக்கங்களில் சிறந்து விளங்கினார்.

அக்காலத்தில் பாண்டிய நாட்டினை நெடுமாறன் என்னும் மன்னன் ஆட்சி செய்தான். அந்த மன்னன், 'நின்ற சீர் நெடுமாறன்', 'கூன்பாண்டியன்' என்னும் பெயர்களையும் கொண்டிருந்தான். அம்மன்னனின் அரசியல் சிறப்புக் காரணமாக, மங்கையர்க்கரசியாரைத் திருமணம் செய்து வைத்தனர். திருமணப்பரிசாக பெருமளவு செல்வத்தைத் தன் மகளுக்கு வழங்கியதோடு, குலச்சிறையார் என்ற அறிஞரை, குடிமக்கள் பலரையும் மகளுடன் மணிமுடிச்சோழன் அனுப்பி வைத்தார்.

குலச்சிறையார் பெரியபுராணத்தில் இடம் பெறும் நாயன்மார்களில் ஒருவர். அவர், மதிநுட்பத்திலும் அறிவாற்றலிலும் சிறந்தவர்; சிவபக்தியிலும் அடியார்

பக்தியிலும் மிக்கவர்; சைவ சமயத்தின் வளர்ச்சியில் அக்கறை கொண்டவர்; அதற்கான செயற்பாடுகளை முன்னின்று நடத்தியவர்; விபூதி, உருத்திராக்கம் என்பவற்றை அணிந்து, திருவைந்தெழுத்தை ஓதும் இயல்பினர்; சிவ அடியார்களைப் போற்றும் பண்பினர். குலச்சிறையாரின் இத்தகைய பண்புகளைக் கண்டு பாண்டிய மன்னன் மிகுந்த மகிழ்ச்சி உற்றார். அதனால், அவரைத் தனது முதல் அமைச்சராக நியமித்தார்.

கல்வி, கேள்விகளில் சிறந்து விளங்கிய மங்கையர்க்கரசியார், மன்னனைப் போல, பாண்டி நாட்டுக்கு நல்லனவற்றைச் செய்து வந்தார். அவர் பட்டத்து அரசியாக இருந்தபோதும் ஆடம்பர வாழ்வை விரும்பினாரல்லர். சைவசமயத்தை மேன்மையுறச் செய்ய வேண்டும் என்னும் உன்னத நோக்கில் தொண்டுகளைச் செய்துவந்தார். அவரது சிவத்தொண்டுகளுக்கு முதல் அமைச்சர் குலச்சிறையார் உற்றதுணையாக இருந்து உதவினார்.

நெடுமாற மன்னனின் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டில் சமண சமயம் பெருமளவில் பரவியிருந்தது. பாண்டியன் நெடுமாறன் தான்செய்த முன்தீவினைப் பயனால், சமணத் துறவிகளின் போதனைகளைக் கேட்டு சமண சமயத்தைத் தழுவிக் கொண்டார். மன்னரைப்பின்பற்றி குடிமக்களும் சமண சமயத்தைத் தழுவினர். அதனால், நாட்டில் சைவசமயம் குன்றலாயிற்று.

இந்நிலையிலும் பாண்டிமாதேவியான மங்கையர்க்கரசியாரும் மந்திரி குலச்சிறையாரும் சைவ நெறியிலே நின்றொழுகினர்; சமணசமயம் ஏற்றம் பெற்று வருதலையும், சைவசமயம் தாழ்வுற்று வருவதையும் கண்டு பெரிதும் மனம்தளர்ந்தனர். அவ்விருவரும் மன்னனுக்கு எவ்வளவோ எடுத்துக் கூறியும் பயன் ஒன்றும் ஏற்படவில்லை. அந்நிலையில் திருஞானசம்பந்தர் சைவ சமயத்துக்கு ஆற்றிவரும் தொண்டுகள் பற்றியும், அவர் திருமறைக்காட்டில் எழுந்தருளி இருப்பது பற்றியும் கேள்வியுற்ற மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மிகவும் மகிழ்ச்சியடைந்து, அடியார் சிலரைத் திருஞானசம்பந்தப் பெருமானிடம் அனுப்பினர். அவர்கள் பாண்டிய நாட்டில் சைவ சமயத்தின் நிலையைத் தெரியப்படுத்தியதுடன், சம்பந்தப்பெருமானை மதுரைக்கு எழுந்தருளும்படியும் வேண்டினர்.

அப்பொழுது, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசருடன் திருமறைக் காட்டில் மடம் ஒன்றிலே தங்கியிருந்தார். அடியார்களின் வேண்டுகோளை ஏற்று மதுரைக்குச் செல்ல விரும்பினார். அதனைத் திருநாவுக்கரசரிடம் கூறினார். அதற்கு அவர், ''சமணர்கள் வஞ்சனையான செயல்களைச் செய்ய அஞ்சாதவர்கள்; நான் அவர்களை நன்கு அறிவேன். அத்துடன் நாளும் கோளும் நல்ல நிலையில் இல்லை'' எனக் கூறித் தடுத்தார். அதற்குச் சம்பந்தர், 'சிவபெருமான் நம்முடைய உள்ளத்திலே வீற்றிருப்பதால் ஒரு தீங்கும் வராது' என்று கூறி, இறைவனைத் துதித்து, ''வேயுறு தோளி பங்கன்....'' எனத் தொடங்கும்

தேவாரத் திருப்பதிகத்தைப் பாடினார். திருநாவுக்கரசரைச் சமாதானப்படுத்திய பின் சம்பந்தர் தமது தொண்டர் குழாத்துடன் மதுரைக்குப் புறப்பட்டார்.

திருஞானசம்பந்தர் மதுரையை வந்தடைந்தார். அதனைக் கேள்வியுற்ற மங்கையர்க்கரசியார் உள்ளத்தில் இன்பமும் அன்பும் பொங்க, சம்பந்தப் பெருமானை வரவேற்பதற்காக குலச்சிறையாருடன் சென்றார். இருவரும் திருஞானசம்பந்தப் பெருமானின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி ஆசி பெற்றனர். பின் திருஞானசம்பந்தர் மதுரையில் உள்ள ஆலவாய் கோயிலை நோக்கிக் கைகுவித்து வணங்கி, ''மங்கையர்க்கரசி வளவர் கோன் பாவை.....'' என்னும் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடினார். அப்பதிகத்தில் மங்கையர்க்கரசியாரின் சிவத்தொண்டையும் குலச்சிறையாரின் அரும்பணிகளையும் பாடியுள்ளார். பின் சம்பந்தர், குலச்சிறையாருடனும் தம் அடியார் குழாத்தோடும் திருவாலவாய் ஆலயத்துக்குச் சென்றார். அங்கு தேவாரப் பதிகம் பாடி சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண்ணியம்மையையும் வணங்கினார். பின்னர், குலச்சிறையார் தங்குவதற்கு ஒழுங்கு செய்திருந்த திருமடத்தில் திருஞானசம்பந்தர் அன்றிரவு தங்கினார்.

திருஞானசம்பந்தர் மதுரையில் வந்து தங்கி இருப்பதை அறிந்த சமணர்கள் கலக்கமடைந்தனர்; அரசனிடம் அதனைக் கூறினர். அரசனின் ஆலோசனையுடன் சம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குத் தீ வைத்தனர். அதனை அறிந்த சம்பந்தர், ஆலவாய்க் கடவுளை மனதில் நினைந்து, 'செய்யனே...' எனத் தொடங்கி, 'அமணர் கொளுவுஞ் சுடர் பையவே சென்று பாண்டியற்காகவே' என்று பாடல்தோறும் அமைத்துப் பாடியருளினார். ஆயினும், மங்கையர்க்கரசியாரின் மங்கள வாழ்வு, குலச்சிறையாரின் அன்பு, அரசனைச் செம்மைப்படுத்தும் கருணையுள்ளம், அரசனது உடலைத் தீண்டித் தமது கரங்களால் திருநீறு பூசும் செயல் இவை யாவற்றையும் கருதி, அத்தீ மெதுவாகவே சென்று பாண்டியனைப் பற்றுமாறு பாடியருளினார். அதனால், மடத்திலே தீ அணைந்தது; அது பாண்டிய மன்னனை வெப்புநோயாகப் பற்றியது.

அரசன் அடைந்த வேதனையையறிந்த மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் விரைந்து பாண்டிய மன்னனை அணுகினர். ''சமணர்கள் தீ வைத்ததன் விளைவு இதுவாக இருக்கலாம். எனவே, திருஞானசம்பந்தரே இதனைத் தீர்க்கவல்லார்'' என்று அரசனுக்கு அறிவுரை கூறினர்.

நோய் தீர்த்தலையே விரும்பிய மன்னன், ''சம்பந்தரால் இந்நோய் நீங்குமாயின், நான் அவர் பக்கம் சேர்வேன். அவரை அழையுங்கள்'' என்றார். அரசனின் வேண்டுதலை ஏற்று, பாண்டிமாதேவியும் குலச்சிறையாரும் சம்பந்தரை அழைத்து வந்தனர்; அரசனது நோயை நீக்குமாறு வேண்டினர்.

அரசன் தன் முடியின் பக்கத்தில் இரத்தின ஆசனம் இடுவித்து, அதில் சம்பந்தரை அமரச் செய்தார். சம்பந்தரைக் கண்ட சமணர்கள் உள்ளங் கலங்கினர்; தமது சமயக் கொள்கைகளை இடிபோல் முழங்கி வாதம் செய்தனர். அப்பொழுது தேவியார் கேட்டுக் கொண்டபடி அரசன், ''நீங்கள் எனது இடதுபக்க நோயையும் சம்பந்தர் வலதுபக்க நோயையும் தீர்க்க வேண்டும்; நோயை யார் தீர்க்கின்றாரோ அவர் சமயமே மெய்ச்சமயம்'' என்று கூறினார்.

சமணர்கள் அரசனது இடப்பக்க நோயை நீக்க முயன்று கொண்டிருந்தனர். ஆனால், அது நீங்காது மிகுந்தது. அதன் பின்னர், சம்பந்தர் திருக்கையில் திருநீற்றை எடுத்து இறைவனை நினைந்து, ''மந்திரமாவது நீறு....'' என்று தொடங்கும் திருநீற்றுப் பதிகத்தைப் பாடி திருநீற்றைப் பூச, வலப்பக்க வெப்பு நோய் முற்றாக நீங்கியது. அரசன் இடப்பக்க நோயையும் நீக்கியருளுமாறு வேண்ட, ஞானசம்பந்தர் அவ்வாறே செய்தருளினார். பாண்டிய அரசன் நோய் நீங்கியெழுந்தான். அத்துடன் அவனது கூனும் நீங்கியது. பாண்டியன் நெடுமாறன் சம்பந்தரின் பாதங்களில் வீழ்ந்து பணிந்தான்; மீண்டும் சைவனானான். அரசனைத் தொடர்ந்து குடிமக்களும் திருநீறு பூசிச் சைவநெறியில் புகுந்தனர். பாண்டிய நாட்டில் சைவம் தழைத்தது. அந்நிலையைக் கண்டு மங்கையர்க்கரசியாரும் அளவிலா மகிழ்ச்சியடைந்தார். அரசனும் அரசியும் அமைச்சரும் நீண்ட காலம் சைவப்பணி புரிந்து பேரின்ப நிலையை எய்தினர். அவர்கள் மூவரும் அறுபத்து மூன்று நாயன்மார்கள் தொகைக்குள் அடங்கியவர்களாக சம்பந்தர், சுந்தரர், சேக்கிழார் என்போராற் பாடப்பெறும் பேறும் பெற்றனர்.

பாடச் சுருக்கம்

- மங்கையர்க்கரசியார் 'மானி' என்னும் இயற்பெயரைக் கொண்டவர். பாண்டிய மன்னன் நின்ற சீர் நெடுமாறனின் மனைவி. அவரது சமயப் பணிக்கு உதவியாக இருந்தவர் முதன் மந்திரி - குலச்சிறையார்.
- மங்கையர்க்கரசியார் தனித்துவமும், நற்பண்புகளும் கொண்டவர்; சங்கம (அடியார்) வழிபாட்டில் சிறந்தவர்; சிவனடியார்களுக்கு மதிப்பளித்தவர். நாட்டின் நன்மைக்காகச் சிந்தித்துச் செயற்பட்டவர். சைவசமயத்தை மேன்மையுறச் செய்யும் நோக்கில் பணியாற்றியவர்.
- சம்பந்தர் மூலமாக திருநீறு, அதன் சிறப்பு என்பவற்றை பரப்புவதில் பங்காற்றினார்.
- மங்கையர்க்கரசியாரின் சிவத் தொண்டின் பெருமையைச் சம்பந்தரும், சேக்கிழாரும் போற்றிப் பாடியுள்ளனர்.
- மங்கையர்க்கரசியார், பாண்டியன் நின்ற சீர் நெடுமாறன், குலச்சிறையார் ஆகிய மூவரும் புரிந்த சைவப்பணி காரணமாக அவர்கள் பெரியபுராணத்தில் பாடல் பெறும் பேறு பெற்றனர்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடையளியுங்கள்.

(1) மங்கையர்க்கரசியாரிடம் காணப்பட்ட நற்பண்புகளைத் தருக.

(2) இப்பாடத்தில் உங்களைக் கவர்ந்த மூன்று பாத்திரங்களைக் குறிப்பிட்டு, அவர்கள் ஒவ்வொருவரும் செய்த தொண்டுகளை எழுதுக.

(3) ''பாண்டிய அரசன் சமண சமயத்தைச் சேர்ந்ததால் பல துன்பங்களை அனுபவித்தான்.''

(i) மேற்கூறிய கூற்றின் மூலம் நீங்கள் பெற்றுக் கொண்ட படிப்பினைகள் இரண்டினைக் குறிப்பிடுக.

(ii) பாண்டிய மன்னன் சமணசமயத்தை தழுவியமைக்கான காரணங்கள் இரண்டினை எழுதுக.

(iii) பாண்டிய மன்னன் அனுபவித்த துன்பங்களை விபரித்து எழுதுக.

## செயற்பாடு

(i) 'மங்கையர்க்கரசியார்' என்ற பாடத்தை நாடகமாகத் தயாரித்து வகுப்பில் நடித்துக் காட்டுக.

(ii) 'மங்கையர்க்கரசியார் காலத்தில் சைவசமயத்தின் நிலை' என்ற தலைப்பில் 3 நிமிடப் பேச்சு ஒன்றினைத் தயாரித்து, வகுப்பில் பேசிக்காட்டுக.

# 3.1 திருமுறைகள்

திருமுறைகள் என்பது தெய்வீக உணர்வு பெருக, சமய ஒழுக்கத்தைப் பேணும் நூற்தொகுதியாகும். இத்திருமுறைகள் பன்னிரண்டாகும். முதல் ஏழு திருமுறைகளும் தேவாரங்களாகும். எட்டாம் திருமுறையில் திருவாசகமும் திருக்கோவையாரும் ஆகும். ஒன்பதாம் திருமுறையில் திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டாகும். பத்தாம் திருமுறை திருமந்திரம் ஆகும். பதினோராம் திருமுறை பன்னிருவர் பாடிய பல்வகைப் பிரபந்தங்களின் தொகுப்பாகும். பன்னிரண்டாம் திருமுறை பெரிய புராணமாகும்.

இத்திருமுறைகள் இறைவன் மீது சூட்டப்பட்ட பக்திப்பனுவல்களாகும். இவற்றைப் பண்ணோடு ஓதுதல் வேண்டும். திருமுறைகள் ஓதுவதற்கு முன்பும் பின்பும் திருச்சிற்றம்பலம் சொல்வது கட்டாயமாகும். இத்திருமுறைகளில் தேர்தெடுக்கப்பட்ட மேல்வரும் பாடல்களைக் கற்போம்.

## தேவாரங்கள்

திருமறைக்காடு

பதிக வரலாறு

திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றுப் பஞ்சம் நீக்கிய பின்பு அப்பரும் சம்பந்தரும் இணைந்தே திருமறைக்காட்டிற்குச் சென்றனர். அத்திருக்கோயிலில் தாழிடப்பட்டு எவராலும் திறக்கப்படாத கதவு பற்றிய செய்தி அறிந்த இருபெருங் குரவர்களும் அக்கதவருகே சென்று சொல்வேந்தர் திறக்கப் பாடியும் தமிழ் வேந்தனர் அடைக்கவும் பாடிய அற்புதத்தை நிகழ்த்தினர்.

## இரண்டாம் திருமுறை

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் : இந்தளம் தாளம் : ஆதி

இராகம் : நாதநாமக்ரியா

தலம் : திருமறைக்காடு

திருச்சிற்றம்பலம்

சதுரம்மறை தான்துதி செய்து வணங்கும்
மதுரம்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
இதுநன்கிறை! வைத்தருள், செய்த எனக்குன்
கதவம்திருக் காப்புக் கொள்ளுங் கருத்தாலே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

பெருமை கொண்ட நான்மறைகள் போற்றி வணங்குகின்ற சிறப்பான பொழில்கள் சூழ்ந்த திருமறைக்காடு எனும் இத்திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் புனிதனே! திருக்கதவம் காப்பிடுமாறு அருள்புரிந்திடுக.

## மூன்றாம் திருமுறை

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

சீர்காழி என்னும் தலத்திற்கு கழுமலம் எனும் சிறப்பு பெயர் சூட்டி திருஞானசம்பந்தர் கழுமலப்பதிகம் ஒன்றைப் பாடியுள்ளார். இக்கழுமலத் திருப்பதிகத்தில் நல்ல வண்ணம் வாழலாம் எனும் ஆக்கச் சிந்தனையை மக்களிடையே வளர்க்கும் நோக்கில் இது பாடப்பட்டது.

தலம் : திருக்கழுமலம் (சீர்காழி) பண் : கொல்லி

திருச்சிற்றம்பலம்

மண்ணில்நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணிநல் ல∴துறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணிநல் லாளொடும் பெருந்தகை இருந்ததே

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

அர்த்தநாரீஸ்வரர் ஆகிய உமை நாயகர் நம்பிக்கையூட்டும் பெருந்தகையாகத் திருக்கழுமலத்தில் கண்ணுக்கு இனியவராய் குடிகொண்டிருப்பதால், நாம் இம்மையில் நல்வாழ்வும் மறுமையில் நற்கதியும் பெறுவதில் என்ன குறை வரப்போகிறது.

## ஐந்தாம் திருமுறை

திருநாவுக்கரசு நாயனார்

திருக்குறுந்தொகை

தலம் : திருமறைக்காடு

திருச்சிற்றம்பலம்

பண்ணி நேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னாவலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

பண்ணின் நேர்மொழியான இப்பெண், திருநீற்றினை நன்கு பூசிய தோணிபுரத்து இறைவனுக்கு விருப்போடு பிச்சை இட்டனள்; பிச்சையிட்ட இக்காரிகையைத் தன்பால் மயங்கிடச் செய்து கைவளையல்களையும் கவர்தல் இப்பிரானுக்கு அழகோ?

## திருநாவுக்கரசு நாயனார்

அப்பர் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு சிதம்பரத்திற்கு வந்தபோது அவராற் பாடப்பட்ட பதிகத்தில் ஒரு பாடல் கீழே தரப்படுகின்றது. நடராசப் பெருமானின் அற்புதத் திருக்கோலத்தைக் காணும் பேறு கிடைக்க வேண்டுமென பாடியுள்ளார்.

## ஆறாம் திருமுறை

திருநாவுக்கரசு நாயனார்

திருவிருத்தம்

தலம் : சிதம்பரம்

திருச்சிற்றம்பலம்

குனித்தபுருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற் பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

வளைந்த புருவம்; கொவ்வைப்பழம் போலும் சிவந்த வாய். இனிய புன்னகை, குளிச்சியான சடை, பவளம் ஒத்த திருமேனி; அத்திருமேனியில் விளங்கும் பால் போன்ற திருநீறு; உயிர்க்கு நல்லினிமை பயக்கும் தூக்கிய திருவடி ஆகியன இத்திருநடன நிகழ்ச்சியைக் காணப்பெறின் வேண்டா எனவெறுத்தொதுக்கும் மனிதப் பிறவியும் வேண்டியதே எனக்கு.

# சுந்தரர் தேவாரம்

சுந்தரர், பரவையார் என்னும் பெண்மணியைத் திருமணம் செய்து திருவாரூரில் வாழ்ந்து வருங்காலத்தில் குண்டையூர்க் கிழார் என்னும் ஒருவர் சுந்தரரின் இல்வாழ்க்கைத் தேவைக்காக நெல் மூடைகளை உதவினார். ஒரு முறை மழை இல்லாமல் பஞ்சம் ஏற்பட்டது. அப்போது ஒரு நாள் சுந்தரருக்கு அனுப்பத் தன்னிடம் நெல் இல்லாமையினால், குண்டையூர்கிழார் உணவை உண்ணாமலே இரவில் உறங்கினார். சிவபெருமான் குண்டையூரர் கனவில் தோன்றி ''ஆரூரன் தனக்கு உதவ உன்பால் நெல் தந்தோம்'' என்று கூறினார். உறக்கம் கலந்தெழுந்தகிழார் சிவபிரான் அருளால் குவிந்த நெல்லைத் திருவாரூரருக்கு எடுத்துச் செல்ல ஆள் கிடைக்காமையால் கவலையுற்று சுந்தரருக்கு தகவல் அனுப்பினார்.

அச்சந்தர்ப்பத்தில் சுந்தரர், ''நீள நினைந்து..'' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடினார். இத்திருப்பதிகத்தில் சுந்தரர் திருக்கோளிலிநாதரைத் துதித்து வேண்டிக் கொண்டவாறு அன்றிரவு பரவையாரின் மாளிகையில் நெல் மலையாக குவிந்தது.

## ஏழாம் திருமுறை

சுந்தரமூர்த்தி நாயனார்

தலம் : திருக்கோளிலி                    பண் : நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நீள நினைந்தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள் வாடி வருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமா னவையட்டித் தரப்பணியே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

திருக்கோளிலி என்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய எம்பெருமானே! நான் எப்பொழுதுமே உம்மை தொடர்ந்து மனத்தால் நினைத்து, கைகூப்பிக் கும்பிடும் அடியவன், வாள் போலக் கூர்மையான கண்கள் உள்ள என் பிரியமான பரவையார் மனச்சோர்வும் உடல் வருத்தமும் அடையாமல் வாழ வேண்டும் என்பதற்காகக் குண்டையூர்க்கிழார் மூலம் பெருமளவு நெல்லைப் பெற்றுள்ளேன்; ஆனால் நெல் மூட்டை அவ்வளவையும் குண்டையூரிலிருந்து பரவையாரின்

மாளிகைக்குக் கொண்டு செல்ல உதவியாள் யாரும் கிடைக்கவில்லை. எனவே, எம்பெருமானே! அந்த நெற்குவியல்களைக் கொண்டு செல்வதற்கு அருள் புரிவீராக.

சுந்தரர் தேவாரம்

## திருத்தொண்டத்தொகை

திருவாரூர் கோயிலின் முற்பக்கத்தில் ஆயிரங்கால் மண்டபம் ஒன்று உள்ளது. அது தேவாசிரிய மண்டபம் எனப்படும். அங்கு கூடியிருந்த சிவனடியார்களை வணங்கித் தாம் அவர்கள் எல்லோருக்கும் அடியவன் என்று சுந்தரமூர்த்தி நாயனார் திருப்பதிகம் பாடினார். அதுவே திருத்தொண்டத் தொகை எனப்படும். அதிலே தம்மை தவிர்ந்து அறுபத்து இரண்டு தனி அடியார்களைப் பெயர் கூறியும் ஒன்பது தொகை அடியார்களைப் பெயர் குறியாமற் பொதுவாகவும் அவர் பாடியுள்ளார். திருத்தொண்டத் தொகைப் பதிகத்தில் முதலாவது பாடல் இங்கு தரப்பட்டுள்ளது.

தலம் : திருவாரூர் பண் : கொல்லிக் கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் கொன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

தில்லை நடராஜ பெருமானின் அடியார்களாகிய தில்லைவாழ் அந்தணருக்கு அடியேனாவேன். திரு நீல கண்டநாயனாருக்கு அடியேன். சிவனடியார்களுக்கு எதனையும் இல்லை என்று கூறாத இயற்பகைநாயனாருக்கும் அடியேன். இளையான்குடிமாறன் அடியாருக்கும் அடியேன். வெற்றி பெறுவதில் மிக வல்லவரான மெய்ப்பொருள் நாயனாருக்கு அடியேன். அல்லிப் பூவும் மென்மையான முல்லைப் பூவும் கலந்து கட்டிய மாலை அணிந்த அமர்நீதி நாயனாருக்கு அடியேன். அத்தகைய ஆரூரனாகிய அடியேன். திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் என் தந்தையால் ஆட்கொள்ளப்பட்டவனானேன்.

# திருவாசகம்

திருவாசகம் மாணிக்கவாசகரால் பாடப்பட்டது. இது எட்டாந் திருமுறையில் உள்ளடக்கப்பட்டுள்ளது. திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் இறைவனை நினைத்து அவரால் பாடப்பட்ட இப்பதிகம் வாழாப்பத்து எனப்படுகிறது.

வாழாப்பத்து

தலம் : திருப் பெருந்துறை

திருச்சிற்றம்பலம்

பாரொடு விண்ணாய்ப் பரந்தவெம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே!

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

பார் முதல் விண் வரை ஐம்பூதமாக விரிந்தவரே, எம்பிரானே உன்னையன்றி வேறு பற்றுக்கோடில்லை; சீருள்ளவனே, சிவலோகனே; திருப்பெருந்துறைச் சிவனே, என் குறைக்கு நான் யாரை நோவேன்; இதை யாரிடம் முறையிடுவேன்; என்னை ஆட்கொண்ட நீயே அருள வேண்டும். நீ அருளாது விட்டால், இவ்வுலகில் வாழும் வகையறியேன்; ஆதலால் அருள் கூர்ந்து ''வா'' என்று அழைப்பாயாக.

# திருவிசைப்பா

ஒன்பதாம் திருமுறையிலுள்ள திருவிசைப்பா என்னும் அருட் பாடல்களைப் பாடியவர்கள் திருமாளிகைத் தேவர் தொடக்கம் சேதிராயர் வரையுள்ள ஒன்பது அடியவர்கள் ஆவர். இவர்களில் சேந்தனார் என்பவர் திருவிசைப்பாவைப் பாடிய தோடு திருப்பல்லாண்டும் பாடியுள்ளார். திருவீழிமிழலை என்னும் தலம் மீது சேந்தனார் பாடிய திருவிசைப்பாவில் ''ஏக நாயகனை....'' எனத் தொடங்கும் பாடல் இடம் பெற்றுள்ளது

சேந்தனார்

திருச்சிற்றம்பலம்

ஏகநா யகனை இமையவர்க் கரசை
என்னுயிர்க் கமுதினை யெதிரில்
போகநா யகனைப் புயல்வணற் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேகநா யகனை மிகுதிரு வீழி
மிழலைவிண் ணிழிசெழுங் கோயில்
யோகநா யகனை யன்றிமற் றொன்று
முண்டென உணர்கிலேன் யானே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

ஒரு பெருந்தெய்வமும், தேவர்களை ஆளும் மகாதேவரும், இன்னுயிர் காக்கும் அமுதும், நிகரில்லாத இன்பத் தலைவரும், திருமாலும் அருள் புரிந்து ஊர்தியாகக் கொண்ட அந்தி மேகவண்ணனும், வளம் மிக்க திரு வீழிமிழலை என்னும் தலத்தில் உள்ள விண்ணிழி விமானம் எனும் செழுங்கோயிலில் உறையும் யோக நிலைத் தலைவனும் ஆகிய சிவநாயகரைத் தவிர, வேறொரு உயர் தெய்வம் உள்ளதென நான் ஒருபோதும் உணரவில்லை.

## திருப்பல்லாண்டு

திருமுறை வகுப்பில் ஒன்பதாம் திருமுறையாக திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் இடம்பெறுகின்றன. சிவபெருமானிடத்தில் சேந்தனார் வைத்த அன்பின் உயர்வை உலகத்தாருக்கு உணர்த்துவதற்காக தில்லை நடராஜப் பெருமான் ''சேந்தா நீ பல்லாண்டு பாடினால் நம் தேர் ஓடும்'' என்று அங்கு நின்ற எல்லோரும் அறிய அசரீரி வாக்கொன்று ஒலித்தது. சேந்தனார் இறைவனை நினைத்துத், திருப்பல்லாண்டு பாடலானார் தேர் நகர்ந்தது. அற்புதம் நிறைந்த இந்நிகழ்ச்சியை நினைந்துருகச் செய்யும் திருப்பல்லாண்டென்று இங்கே தரப்படுகிறது.

தலம் : தில்லை பண் : பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மிண்டு மனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள்
விரைந்து வம்மின்
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி ஈசற்காட்
செய்மின் குழாம்புகுந்து
அண்டங் கடந்த பொருள் அளவில்லதோர்
ஆனந்த வெள்ளப்பொருள்
பண்டும் இன்றுமென்று முள்ளபொரு ளென்றே
பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை

எம்பெருமானாகிய சிவபெருமானை வணங்காமை காரணமாக முரண்பட்ட மனதை உடையவர்கள் (இவ்விடத்தில் நில்லாமல் அகலுங்கள். எம்பெருமான் மெய்யன்பு பூண்ட அடியார்கள் விரைவாக இங்கு வாருங்கள். (நீங்கள் இந்த) அடியார்கள் கூட்டத்தில் புகுந்து அயரா அன்பு கொண்டு (உங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தும் அவருக்கு) கொடுத்தும் வழிவழியாக அவருக்கு அடிமை பூண்டு தொண்டு செய்யுங்கள். எல்லா அண்டங்களுக்கும் அப்பாற் கொண்ட பரம்பொருளான எம்பெருமான் (அவர்) எல்லை கடந்த வெள்ளம் போன்ற அளவு கடந்து இன்பமயமான பொருள் (அல்லவா) முற்காலத்திலும் இக்காலத்திலும் எக்காலத்திலும் உள்ள (அதாவது ஆதி அந்தம் இல்லாத பொருள்) என்றவாறு (நாம் அவனை) வாழ்த்திப் பல்லாண்டு பாடுவோமாக.

# திருமந்திரம்

திருமூலர் அருளிச்செய்த நூல் திருமந்திரம் ஆகும். இந்நூலில் 3000 பாடல்கள் உள்ளன. சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் ஒழுக்க நெறிகளையும் எடுத்துக் கூறும் உயர்ந்த நூல் திருமந்திரம். இந்நூல் ஒரு சாத்திர நூலாக மட்டுமல்லாமல் தோத்திர நூலாகவும் மதிக்கப்படுகின்றது. அன்புதான் சிவமாகவும் சிவம்தான் அன்பு எனவும் விளங்குகின்ற உண்மையைக் கூறும் திருமந்திரப் பாடல் உங்கள் சிந்தனைக்கும் தெளிவுக்குமாக இங்கு தரப்படுகிறது. பாடிப் பாருங்கள்.

# பத்தாம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

அன்புமும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

அன்பு வேறு சிவம் வேறு என்பவர்கள் அறிவில்லாதவர்கள்; அன்புதான் சிவம் என்பதை எவரும் உணர்ந்திலர். அன்புதான் சிவம் என்னும் சிவஜக்கிய உண்மை எப்போது உணரப்படுகின்றதோ அப்போது அவர் சிவசக்தியை உணர்ந்து இன்புறுவர்.

# பெரிய புராணம்

பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாந் திருமுறையாக அமைகின்றது. இதனைப் பாடியவர் சேக்கிழார் ஆவர். தில்லையில் நடராசப் பெருமானை சுந்தரர் தரிசித்த பொழுது விளைந்த பேரின்ப வெள்ளத்தில் முழ்கிப் பரமானந்தம் அடைந்த நிலையை பெரிய புராணத்தில் வரும் இப்பாடல் குறிப்பிடுகிறது.

திருச்சிற்றம்பலம்

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையா னாடு மானந்த
வெல்லையிற் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துட் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை :-

மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐந்து பொறிகள் வாயிலாகவும், அறியப்படுகின்ற ஊறு, சுவை, ஒளி, மணம், ஓசை என்னும் பெரிய அறிவுகள் ஐந்தும் ஒருமைப்பட்டுக் கட்புலன் ஒன்றிலே ஒடுங்கி நிற்க, அளவைக்கு அகப்படாத தொழிற்பாடுகளையுடைய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் அந்தக் காரணங்கள் நான்கும் மனம் எனும் ஒன்றிலே ஒடுங்கி நிற்க, இராசதம், தாமதம், சாத்துவிகம் என்னும் முக்குணங்களும் அவற்றுட் சிறந்ததான சாத்துவிகம் என்னும் ஒன்றிலேயே ஒடுங்கி நிற்க, பிறைச் சந்திரனைச் சூடிய சடையனாகிய சிவபெருமான் அம்பலத்தில் நின்று ஆடுகின்ற எல்லையில்லாத தனிப் பெருஞ் சிறப்புடைய ஆனந்தக் கூத்தைக் கண்டதனால் விளைந்த பேரின்பமாகிய வெள்ளத்திலே மூழ்கி, ஒரே தன்மையான மகிழ்ச்சியிலே உள்ளம் மலரப் பெற்றார்.

## 3.2 பிற்காலத் தோத்திரப் பாடல்கள்

அருளாளர்களான அடியார் பெருமக்கள் இறைவனைப் பற்றிப் பாடப்படும் பாடல்கள் தோத்திரங்களாகும். பன்னிரு திருமுறைகளுக்குப் பின்னர் இறை அடியார்கள் இறைவன் மீது பல பிரபந்தங்களையும், தனிச்செய்யுட்களையும் பாடியுள்ளனர். அப்பாடல்கள் தோத்திரப்பாடல்கள் என அழைக்கப்படும். இத்தகைய தோத்திரப் பாடல்கள்களுள் திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தபுராணம், அபிராமி அந்தாதி, சகலகலா வல்லிமாலை போன்றவை அடங்கும்.

தோத்திரங்களில் அடியார்கள் தங்களுடைய குறைகளையும் துயரங்களையும் இறைவனிடம் முறையிடும் தன்மையையும் இரந்து வேண்டும் பண்பினையும் காணலாம். அத்துடன் சைவசித்ததாந்தக் கருத்துக்களை நிறையவே தோத்திரப் பாடல்கள் கொண்டிருக்கும்.

தோத்திரங்கள் என்பவை, அடியார்களால் பொருள் உணர்ந்தும் பொருள் உணராமலும் பாடக் கூடியவை; இன்னிசைக்கு அமைவாகவோ, அமையாதோ தங்கள் ஆற்றலுக்கு ஏற்ப இறைவனைப் பாடிப் பரவிப் பயன்பெற உதவுபவை; எளிதிலே இறையருளைப் பெறக்கூடிய பக்தி மார்க்கமாக அமைபவை இத்தகைய சிறப்புகளைத் தோத்திரப் பாடல்களிலே காணலாம்.

### (அ) திருப்புகழ்

''வாக்கிற்கு அருணகிரி'' என்று போற்றப்படுபவர் அருணகிரிநாதர். அவர் இயற்றிய திருப்புகழ் கந்தரலங்காரம், கந்தரனுபூதி, வேல்விருத்தம், மயில் விருத்தம், திருவகுப்பு, கந்தரந்தாதி ஆகிய நூல்கள் தோத்திரப் பாடல்களுள் அடங்கும். அவற்றுள் திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி ஆகிய மூன்று நூல்களும் மிகவும் சிறப்பு வாய்ந்தவை; சைவ மக்களின் பாராயண நூல்களாக விளங்குபவை.

அருணகிரிநாதர், முருகப்பெருமானது புகழையும் மகிமையையும், அருட்டிறத்தையும் பல வகையாலும் புகழ்ந்து பாடிய சைவத் தமிழ் நூல் திருப்புகழ் ஆகும். இந்நூல் கற்பவரைப் பிறவிக் கடலினின்றும் கரைசேர்க்கும் தோணி; இறை பற்றிய பொது மக்களின் நம்பிக்கையை வலுப்படுத்திய நூல்.

தேவாரங்களை ஓதும்போது பண் இசை பயன்படுவது போன்று திருப்புகழ் பாடும்போது சந்த இசை பயன்படும். அருணகிரிநாதர் திருப்புகழ்களைக் குறிப்பிட்ட சில தலங்கள் மீது பாடியுள்ளார். முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளுள் ஒன்று திருவேரகம். அது சுவாமிமலை எனவும் வழங்கப்படும். திருப்புகழ் திருவேரகத்தில் வீற்றிருக்கும் முருகப் பெருமான் மீது பாடப்பட்டதாகும்.

## சுவாமிமலை (திருவேரகம்)

சரணகமலா லயத்தை அரைநிமிட நேர மட்டில்
தவமுறை தியானம் வைக்க - அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்கம் - முறுவேனோ
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர்பெற்ற - குமரோனே
கடகபுய மீதுரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடம்பம் - அணிவோனே
தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க - பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுநெய்த்த - வடிவேலா
அருணதள பாதபத்ம மனுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த - மயில்வீரா
அதிசிய நேக முற்ற பழநிமலை மீதுதித்த
அழகதிரு வேரகத்தின் - முருகோனே

**பதவுரை :-**

**கயிலைமலை நாதர் பெற்ற** - கயிலை மலைக்குத் தலைவரான சிவபெருமான் பெற்ற; குமரோனே - **குமரன் என்னும் பெயருடையரே;** கடகபுயமீது- **தோள் வளைமீது;** ரத்நமணி அணி - **இரத்தினக் கற்களால் ஆன மாலையும்;** பொன்மாலை - **பொன்னாலான மாலையும்;** செச்சை - **வெட்சி மலர் மாலையும்;** அணிவோனே - **நெய் பூசப்பட்ட கூர்மையான வேலையுடையவனே;** அருணதள - **செந்நிறம் பொருந்திய இதழ்களை உடைய;** பாத பத்மமது - **உமது பாதங்களாகிய தாமரை மலர்களை;** நிதமுமே துதிக்க - **நான் ஒவ்வொரு நாளும் துதித்துப் பாட;** அரிய தமிழ்தான் அளித்த - **அரிய தமிழ் மொழியை எனக்குக் கொடுத்தருளிய;** அதிசயம் அநேகம் உற்ற - **அற்புதங்கள் அதிகளவு இடம் பெற்ற** பழனிமலை மீது உதித்த - **பழனிமலை மீது தோன்றிய;** அழக - **அழகனே** திருவேரகத்தின் முருகோனே- **திருவேரகம் என்னும் பழனி மலையில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானே** சரண கமல ஆலயத்தை - **சரணமடைந்து உய்ய உதவும் உன்னுடைய பாதங்களாகிய தாமரைக் கோயிலை;** அரை நிமிட நேர மட்டில் - **அரைநிமிடமாவது (மிகக்குறைந்த**

நேரமாவது); தவமுறை தியானம் வைக்க அறியாத - ஐம்புலன்களையும் ஒடுக்கி மனத்தை ஒருநிலைப்படுத்தி ஒரு முகமான சிந்தனையில் நினைத்திருக்கத் தெரியாத; சட - தூல சரீரத்தை உடைய; கசட - குற்றமடைய; மூட - அஞ்ஞானம் மிகுந்து (மூடன்); மட்டி - அறிவில்லாத; பவவினையிலே சனித்த - பிறப்பிற்குக் காரணமான தீவினையினாற் பிறந்த; தமியன் - தனிப்பட்டவனாகிய நான்; மிடியால் மயக்கம் உறுவேனோ- துன்பத்தினால் மனக்கலக்கம் அடைந்து வருந்துவது தகுமோ? கருணை புரியாது இருப்பது என்னிடத்தில் உனது இயற்கையான அருளிரக்கம் கொண்டு கருணை செய்யாது நீ இருப்பதற்கு; என குறை- என்னிடத்தில் உள்ள குறைபாடுகள் என்ன? ; இவ்வேளை செப்பு - இச்சமயத்தில் கூறுவாயாக; ஐயா -ஐயனே (தலைவனே); இது தருணம்- இது தான் நீ கருணை கொண்டு அருள்புரிவதற்கான தகுந்த சமயம்; மிகுந்த கனம் அது உறு- மிகுந்த பெருமை கொண்ட; நீள் சவுக்ய - நீண்ட சுகத்தைத் தருவதான; சகல செல்வ யோகம் மிக்க - எல்லாவிதமான செல்வங்களும் வாய்க்கக் கூடிய யோகம் மிகுந்த; பெருவாழ்வு - சிறந்த வாழ்வும்; தகைமை- மிகவும் மேன்மையான; சிவஞானமுத்தி பரகதியும் - சிவஞானத்தையும், அதனால் பெறக்கூடிய முத்தியையும்; நீகொடுத்து உதவி புரிய வேணும் - நீ எனக்குத் தந்து அருள் புரிய வேண்டும்.

பொழிப்புரை

கயிலை மலைக்கும் தலைவரான சிவபெருமான் பெற்ற குமரக்கடவுளே! தோள் வளை அணிந்த புயத்தின் மீது இரத்தின மாலைகளையும் பொன் மாலையையும் வெட்சி மாலையையும் மணம் வீசுகின்ற கடப்ப மாலையையும் அணிந்தவனே! நெய் பூசப்பெற்ற கூரிய வாளை ஏந்தியவனே, செந்நிற இதழ்களை உடைய உனது பாதங்களாகிய தாமரை மலர்களை நான் தினந்தோறும் துதித்துப் பாட அருமையான தமிழ் மொழியை அளித்தருளிய மயிலை வாகனமாகக் கொண்ட வீரனே! அற்புதங்கள் பலவும் நிறைந்த பழனிமலை மீது தோன்றிய அழகனே!

திருவேரகம் என்னும் சுவாமிமலையில் எழுந்தருளியுள்ள முருகனே! உன்னுடைய பாதங்களாகிய தாமரைக் கோயிலை மிகக்குறைந்த அளவான அரை நிமிட நேரங் கூடத் தவம் செய்யும் முறையில் புலன்களை ஒடுக்கி மனத்தை ஒருநிலைப்படுத்தி ஒருமுகமாகச் சிந்தனையில் நிலைத்திருக்கத் தெரியாத தூல சரீரத்தையுடைய குற்றமுடைய அஞ்ஞானம் மிகுந்த அறிவில்லாத பிறப்பிற்கே காரணமான தீவினையினால் பிறந்த தனிப்பட்டவனான நான்

துன்பத்தினால் மனக் கலக்கத்தை அடைந்து வருந்துவது தகுமோ? என்னிடத்தில் உனது இயற்கையான அருளிரக்கம் கொண்டு கருணையை நீ செய்யாது இருப்பதற்கு என்னிடமுள்ள குறைபாடுகள் என்ன? ஐயனே! இது தான் நீ கருணை கொண்டு எனக்கு அருளினைப் புரியத் தகுந்த சமயம் மிகவும் பெருமை பொருந்திய நீண்ட சுகத்தைத் தருவதான எல்லாவிதமான செல்வங்களும் வாய்க்கக் கூடிய யோகம் நிறைந்த சிறந்த வாழ்க்கையையும் மேன்மையான சிவஞானத்தையும் அதனாற் பெறக்கூடிய முக்தியையும் (வீடுபேற்றையும்) நீ எனக்குத் தந்தருள வேண்டும்.

குறிப்புரை:-

கடகம்- தோள்வளை; அணி- அணிகலம்; செச்சை- வெட்சிமாலை; அருணம் - செந்நிறம்; பத்மம் - தாமரை; நிதமும் - ஒவ்வொருநாளும்; அதிசயம்- அற்புதம்; உற்ற இடம் பெற்ற (நிகழ்ந்த); உதித்த - தோன்றிய; அழக - அழகன்; ஆலயம் - கோயில்; சடம் - தூல சரீரம்; மட்டி - அறிவில்லாத; மிடி - துன்பம் (வறுமை) செப்பு - கூறு; தருணம் - சமயம்; கணம் பெருமை; சவுக்கியம் - சுகம்

விளக்கம்:-

அருணகிரிநாதர் இத்திருப்புகழில், தன்னுடைய இயல்பு, தன்னிடமுள்ள குறைபாடு தான் படுந்துயர், தான் அடைய விரும்புவது, முருகன் தனக்கு அளித்துள்ளவை, முருகனை விளிக்கும் (அழைக்கும்) முறை என்பவற்றைத் தெளிவாக விவரித்துள்ளார். அருணகிரிநாதர் தன்னில் காணும் குறைபாடுகளைக் கூறி முருகனிடம் அருள்பெற விழைகின்றார்.

இத்திருப்புகழில் முருகன் திருவருளினால் அவனுடைய திருவடிகளை அரை நிமிட நேரம் நாள்தோறும் தியானம் செய்தால், தமிழினால் அவனுடைய பாதங்களைப் போற்றிப் பாடிப் பரவினால் மிடி அகன்று பெருமையும் சகல செல்வமும் கிடைக்கும் என்று அருணகிரிநாதர் எமக்குக் கூறியுள்ளார். உள்ள அசட்டினை நீக்கியும் மூடத்தைப் போக்கியும் மடத்தை அழித்தும் சிவஞானத்தைப் பெருக்கியும் முருகன் திருவடிகளை நாள்தோறும் தியானம் செய்து தமிழில் பாடி உருகிப் பரவ வேண்டும். அதுவே பிறவிப் பயனாகிய முக்தியைத் தரும் என்று அருணகிரிநாதர் விளக்குகின்றார்.

### பாடச் சுருக்கம்

- தோத்திரங்கள் இறைவனைப் போற்றிப் பாடப்படுவன.
- தோத்திரங்களுள் திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம், சகலகலாவல்லிமாலை, அபிராமிஅந்தாதி முதலானவை அடங்குகின்றன.
- தோத்திரங்களில் அடியார்கள் தங்களின் குறைகள் துயரங்கள் என்பனவற்றை முறையிடும் பாங்கும் இறைவனிடம் இரந்து பாடிப் பரவும் தன்மையும் உள்ளன.
- பக்தி மார்க்கத்திற்குரிய வழிகளில் தோத்திரம் பாடி வழிபடுதல் இடம் பெறுகின்றது.
- தோத்திரப் பாடல்களுள் ஒன்றான திருப்புகழ் அருணகிரிநாதரால் பாடப்பட்டது.
- பாராயண நூலான திருப்புகழில், முருகப்பெருமானின் மகிமை, புகழ் அருட்டிறன் என்பன போற்றி பாடப்பட்டுள்ளன.
- முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளில் ஒன்று திருவேரகம் (சுவாமிமலை) ''சரணகமலா லயத்தை'' என்ற திருப்புகழ் திருவேரகத்திலுள்ள முருகப்பெருமான் மீது பாடப்பட்டதாகும்.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடைதருக.

1. தோத்திரம் என்றால் என்ன?
2. தோத்திரங்களின் சிறப்புக்களை விளக்கிக் கூறுக.
3. அருணகிரிநாதர் பாடிய நூல்களுள் நான்கினைக் குறிப்பிடுக.
4. திருப்புகழின் முக்கியத்துவங்களைக் குறிப்பிடுக.
5. திருப்புகழ் பாடும்போது கவனிக்க வேண்டிய விடயங்கள் எவை?

### செயற்பாடு

- ''சரணகமலா லயத்தை....'' என்ற திருப்புகழை மனனம் செய்து சந்தத்துடன் வகுப்பறையில் பாடுக. பொழிப்புரையையும் எழுதுக.
- ''சரணகமலா லயத்தை ...'' என்ற திருப்புகழ் மூலம் அருணகிரிநாதர் எவற்றை எடுத்துக் கூறுகின்றார் என்பதை விளக்கமாக எழுதுக.
- இத்திருப்புகழை சந்த இசை பொருந்த பாடிப் பயிலுக.

# 4.1 ஆலய வழிபாடு - III

## கிரியைகள்

சமயத்தோடும், சம்பிரதாயத்தோடும் தொடர்புள்ள நம் வாழ்வை நெறிப்படுத்துவன சைவக் கிரியை ஆகும். இதைச் சடங்கு எனவும் குறிப்பிடலாம். சான்றோர்கள் இதனை நியதிச் செயல்கள் என்கின்றனர். இவை இருவகைப்படும்.

1. ஆலயக்கிரியை
2. வீட்டுக் கிரியை

பூசைகள், அபிஷேகம், திருவிழா என்பவை ஆலயக்கிரியைகள் ஆகும். பூசை என்பதன் விரிவு நிலையே ஆகமக் கிரியைகள் ஆகும். அவ்வாகமம் காட்டும் ஆலயக்கிரியைகள் மூன்று வகைப்படும். அவை

1. நித்தியக் கிரியைகள்
2. நைமித்தியக் கிரியைகள்
3. காமியக் கிரியைகள்.

### 1) நித்தியக் கிரியைகள்

ஆலயங்களில் தமது வசதிக்கேற்ப நாள்தோறும் பூசைகள் நடைபெறுவது வழக்கம். இப்பூசை நித்தியக் கிரியை என அழைக்கப்படும். இந்நித்தியக்கிரியைகள்; மூன்றுவேளை, ஆறுவேளை, பன்னிரு வேளை என ஆலயங்களில் நடைபெற்று வருகின்றன.
ஆறுகாலப் பூசைகள் ஆவன :

- உஷைக்காலப் பூசை
- காலைச் சந்திப் பூசை
- உச்சிக் காலப் பூசை
- சாயரட்டைப் பூசை
- இரண்டாங் காலப் பூசை
- அர்த்தயாமப் பூசை

ஆறுகாலப் பூசைகளில் முதலில் நடைபெறுவது உஷைக்காலப் பூசையாகும். இப்பூசை சூரியன் உதிப்பதற்கு மூன்றே முக்கால் நாழிகைக்கு முன்னர் நடைபெறுவதாகும். காலைச் சந்திப் பூசை என்பது சூரியன் உதித்து ஏழரை நாழிகைக்குள் நடைபெறுவது ஆகும். நண்பகல் நடைபெறுவது உச்சிக் காலப் பூசையாகும். சாயரட்டைப் பூசை சூரியன் மறைவதற்கு மூன்றே முக்கால்

நாழிகைக்கு முன்னர் நடைபெறும். இரண்டாங்காலப் பூசையென்பது சாயரட்டைப் பூசை முடிந்து மூன்றே முக்கால் நாழிகையில் நடைபெறுவதாகும். அர்த்தயாமப் பூசை என்பது இரண்டாங் காலப் பூசை முடிந்து மூன்றே முக்கால் நாழிகை எல்லைக்குள் நடைபெறுவதாகும்.

### 2) நைமித்தியக் கிரியைகள்.

தினமும் அன்றி விசேட தினங்களில் மட்டும் நிகழும் கிரியைகள் நைமித்தியக் கிரியைகள் எனப்படும். இக்கிரியைகள் விசேட தினங்களிலோ, வாரத்திற்கு ஒரு முறையோ, மாதத்திற்கு ஒரு தடவையோ, வருடத்திற்கு ஒரு தடவையோ நடைபெறும். சதுர்த்தி, சஷ்டி, போன்றவை மாதத்திற்கு ஒரு தடவை நடைபெறும் நைமித்திய கிரியையாகும். நவராத்திரி, சிவராத்திரி, மார்கழித் திருவாதிரை போன்றவை ஆண்டுகளுக்குகொரு முறை நிகழும் நைமித்தியக் கிரியைகளாகும். மகாமகம் பன்னிருஆண்டுக்கொரு முறை நடைபெறும் நைமித்தியக் கிரியையாகும்.இதுபோல் பன்னிரு ஆண்டுக்கொரு முறை நடைபெறும் நைமித்தியக்கிரியையாகு ''கம்பாபிஷேகம்"அமைகிறது. இதனைக் குடமுழுக்கப் பெருஞ்சாந்தி என்றும் அழைப்பர்.

### 3) காமியக் கிரியைகள்

பயன் கருதிச் செய்யப்படும் கிரியைகள் காமியக் கிரியைகளாகும். நித்திய நைமித்திய வேளைகளிலும் ஒருவர் பயன் கருதிச் செய்தால் அது காமிய கிரியையின் பாற்படும். உதாரணமாக பரீட்சைப் பெறுபேறு, நோய் நீக்கல், தொழில் வாய்ப்பு, வளமான வாழ்வு வேண்டிச் செய்யப்படுவன.

### நிஷ்காமிய கிரியை

கடமையைச் செய்; பலனை எதிர்பாராதே என்கிறார் கீதையிலே கண்ணன். பலன் கருதாது செய்யும் செயல்கள் நிஷ்காமியக் கிரியைகளாகும். கிணறு தோண்டுதல், குளம் வெட்டுதல், ஆலயம் அமைத்தல், அன்னதானம் வழங்குதல் போன்றன நிஷ்காமிய பணிகளாகும்.

பாடச் சுருக்கம்

- சமயத்தோடும் வாழ்க்கையோடும் தொடர்புபட்டது கிரியைகள் ஆகும்.
- ஆலயக் கிரியைகள், வீட்டுக்கிரியைகள் எனக் கிரியைகளை வகைப்படுத்தலாம்
- ஆலயங்களின் வசதிக்கேற்ப பூசை காலங்களின் எண்ணிக்கை மாறுகின்றது.
- பலனை எதிர்பார்க்காது செய்யப்படுகின்ற கிரியைகள் நிஷ்காமியக் கிரியைகள் எனப்படுகின்றன.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. கிரியையின் மறு பெயர்கள் இரண்டு தருக.
2. கிரியைகள் எத்தனை வகைப்படும்? அவை எவை?
3. நைமித்திய கிரியை என்றால் என்ன? மூன்று உதாரணம் எழுதுக.
4. காமியக் கிரியைகள் நான்கு எழுதுக.

### செயற்பாடு

1. உமது பிரதேச ஆலயமொன்றில் நிகழ்த்தப்படும் நைமித்திய கிரியைகளை பட்டியற்படுத்துக.

2. நித்திய, நைமித்தியக் கிரியைகளின் வேறுபாட்டினை ஆசிரியருடன் கலந்துரையாடி, தொகுத்து எழுதி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

3. நீர் கண்டு வழிபட்ட கும்பாபிஷேகக் கிரியைப் பற்றி ஒரு விவரணக் கட்டுரை எழுதுக.

## 5.1 திருஞான சம்பந்தர்

ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில், சோழ நாட்டில் சீர்காழி எனும் ஊரில் கவுணியர் குலத்தைச் சேர்ந்த சிவபாதவிருதயருக்கும் பகவதி அம்மையாருக்கும் திருவாதிரை நட்சத்திரத்தில் தோணியப்பர் அருளால் பிள்ளையார் அவதரித்தவர்.



பிள்ளையாரின் மூன்றாவது வயதில் ஒரு நாள் அவர் தந்தையார் தோணியப்பர் கோயிலுக்குப் பிள்ளையை அழைத்துச் சென்றார். அங்கு கோயிலில் உள்ள குளக்கரையில் குழந்தையை அமர்த்தி விட்டு தந்தையார் குளத்தில் இறங்கி நீராடினார். அவர் நீரில் மூழ்கியிருந்தபோது அவரைக் காணாது தவித்த குழந்தை கோயிற் கோபுரத்தைப் பார்த்து 'அம்மையே அப்பா' என அழுதது. குழந்தையின் அழு குரலைக் கேட்ட தோணியப்பர் உமையுடன் இடப வாகனத்தில் தோன்றி, பொற்கிண்ணத்தில் திருமுலைப்பாலைக் கறந்து; சிவஞானத்தைக் கலந்து ஊட்டுமாறு அம்மையிடம் கூறினார். அம்மையும் அவ்வாறே செய்தார்.

நீராடிவிட்டு வந்த சிவபாதவிருதயர் குழந்தையின் வாயில் பால் வடிந்திருப்பதைக் கண்டு, யார் உனக்குப் பால் அருந்தத்தந்தது? என கேட்டார். சம்பந்தர் கோயில் கோபுரத்தைச் சுட்டிகாட்டி "தோடுடைய செவியன் ..." எனும் பதிகத்தைப் பாடினார். தந்தையாரும் இறைவன் தன் குழந்தைக்கு அருள் செய்துள்ளான் எனப்புரிந்து கொண்டார். அன்றிலிருந்து "ஆளுடையபிள்ளையார்" எனவும் "சிவஞானசம்பந்தர்" எனவும் திருஞானசம்பந்தர் அழைக்கப்பட்டார்.

இதன் பின்னர், சம்பந்தர் தம் தந்தையார் தோள் மீது அமர்ந்து திருக்கோலக்கா என்ற பதிக்குச் சென்று இறைவனை வணங்கி கைகளால் தாளம் போட்டு "மடையில் வாளை ...." என்ற பதிகத்தை பாடினார். இறைவனும் மகிழ்ந்து அவருக்குப் பொற்றாளம் கொடுத்தருளினார். அங்கிருந்து பல தலங்களுக்கும் சென்று இறை தரிசனம் செய்தார். தம் தாயாரின் பிறந்த ஊரான திருநனிபள்ளி என்ற தலத்தை அடைந்து "காரைகள் கூவலாக முல்லை" என்ற பதிகத்தைப் பாடி பாலை நிலமாக விளங்கிய அப்பகுதியை நெய்தல் நிலமாக மாற்றினார். திருநெல்வாயிலரத்துறை இறைவன் சம்பந்தருக்கு முத்துச்சிவிகை, முத்துக்குடை என்பன அளித்தார்.

திருச்சிலாச்சிரமத்தில் கொல்லிமழவன் என்ற அரசனின் மகளைத் துன்புறுத்திய முயலகன் நோயை ''துணிவளர் திங்கள்....'' என்னும் பதிகம் பாடி நீக்கியருளினார். திருவாவடுதுறையில் தந்தையின் வேள்விக்காக ''இடரினும் தளரினும் ....'' என்ற பதிகத்தைப் பாடி இறைவனிடம் பொற்கிழி பெற்றுக் கொடுத்தார். திருமருகல் என்ற தலத்தில் பாம்பு தீண்டி இறந்த வணிகனின் மனைவியின் துயர் நீக்க ''சடையாயெனுமால்...'' என்ற பதிகம் பாடி வணிகனை உயிர் பெற்றெழச் செய்தார்.

இவ்வாறாகப் பலத் தலங்களுக்கும் தலயாத்திரை மேற்கொண்ட சம்பந்தர் நாவுக்கரசருடன் திருவீழிமிழலை எனும் தலத்திற்குச் சென்றார். அவ்வூரில் மக்கள் பஞ்சத்தால் வாடியதைக் கண்டு இறைவனிடம் படிக்காசுப் பெற்று பஞ்சம் தீர்த்தனர். அப்பரின் காசு வாசி இல்லாத நல்ல காசாகவும் சம்பந்தரின் காசு வாசி உள்ள காசாகவும் காணப்பட்டதால் சம்பந்தர் ''வாசி தீரவே காசு நல்குவீர்....'' என்ற பதிகத்தைப் பாடி நல்ல காசினைப் பெற்று பஞ்சத்தைப் போக்கினார். அங்கிருந்து இருவரும் திருமறைக்காடு சென்றார்கள். பல ஆண்டுகளாக பூட்டியிருந்த கோயிலின் கதவைத் திறக்க நாவுக்கரசர் ''பண்ணினேர் மொழியாள்...'' என்ற பதிகத்தையும், கதவை மூடித்திறக்க சம்பந்தர் ''சதுரம் மறை தான் ...'' எனத்தொடங்கும் பதிகத்தையும் பாடினர்.

அப்பருடன் சில நாட்கள் தங்கிய சம்பந்தர், திருபூந்துருத்தியை அடைந்தார். அங்கு ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கினார். பின் திருவொற்றியூர் தலத்தைத் தரிசித்து திருமயிலைப் பதிக்குச் சென்றார். அங்கு பானையில் இருந்த பூம்பாவை என்ற பெண்ணின் எலும்பை ''மட்டிட்ட புன்னை..'' எனும் பதிகத்தைப் பாடி மீண்டும் உயிர் பெற்று எழச் செய்தார்.

பல தலங்களையும் தரிசித்த சம்பந்தர் சீர்காழிக்கு வந்தார். அங்கு திரு நல்லூரிலுள்ள நம்பியாண்டார் நம்பியின் மகளைச் சம்பந்தருக்குத் திருமணம் செய்ய ஏற்பாடாகிறது. வைகாசி மாத மூல நட்சத்திரத்தன்று திருமணக் கோலத்தில் மனைவியுடன் வீற்றிருந்த சம்பந்தர் இறைவன் திருவடி நினைத்து 'காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி...' என்னும் பதிகம் பாடி திருமணத்திற்கு வந்த அடியவர்கள் அனைவரோடும் அருட்பெருஞ்சோதியில் கலந்தார்.

## பாடச் சுருக்கம்

- சோழநாட்டின் சீர்காழியில் சிவபாதவிருதயருக்கும் பகவதியாருக்கும் மகனாகப் பிறந்தார்.
- திருஞான சம்பந்தர் மூன்று வயதில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர்.
- முத்துச் சிவிகை, முத்துச் சின்னம் ஆகிய விருதுகளைப் பெற்று முதற் சமய குரவரானார்.
- திருஞானசம்பந்தரும், அப்பரும் சேர்ந்து அற்புதங்களைப் புரிந்துள்ளனர்.
- சமணர்களுடன் வாதிட்டுச் சைவ சமயமே மெய்யானது என்பதை நிரூபித்தார்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. திருஞானசம்பந்தர் என அழைக்கப்படுவதற்கான காரணம் யாது?
2. திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் சேர்ந்து புரிந்த அற்புதங்கள் எவை?
3. பாண்டிய மன்னனுக்கு வெப்பு நோய் ஏற்படக் காரணம் யாது?
4. திருஞானசம்பந்தர் முத்துக்குடை, முத்துச் சின்னம் என்பவற்றை பெற்ற இடம் எது?
5. சம்பந்தரின் குருபூசைத் தினம் எது?

## செயற்பாடு

திருஞானசம்பந்தர் புரிந்த அற்புதங்களையும் அச்சந்தர்ப்பங்களில் பாடிய பதிகங்களையும் அட்டவணைப் படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

# திருநாவுக்கரசர்

திருமுனைப்பாடி நாட்டின் திருவாமூரில் புகழனாருக்கும் மாதினியார்க்கும் மகனாக நாவுக்கரசர் அவதரித்தார். இவரின் பிள்ளைத் திருநாமம் மருள்நீக்கியார் என்பதாகும். இவருக்குத் திலகவதியார் என்ற தமக்கையார் ஒருவர் இருந்தார். மருள்நீக்கியார் சிறுவயதிலேயே பல கலைகளையும் கற்றுத் தேர்ந்தார்.



திலகவதியாருக்குப் பன்னிரெண்டு வயதாகியபோது அவரை அரசனின் சேனாதிபதியான கலிப்பகையாருக்குத் திருமணம் பேசி முடித்தனர். அச்சமயத்தில் போர் மூண்டதால் கலிப்பகையார் போருக்குச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. கலிப்பகையார் போரில் ஈடுபட்டிருந்த வேளை புகழனாரும் நோய்வாய்ப்பட்டு இறக்க, கவலை தாங்க முடியாமல் மாதினியாரும் உயிர் நீத்தார். பெற்றோரின் பிரிவால் குழந்தைகள் இருவரும் துன்புற்றனர். சுற்றத்தார் தேற்ற துயரொழிந்து பெற்றோருக்கு ஈமக்கடன்களைச் செய்தனர். பின் போர் முனைக்குச் சென்ற கலிப்பகையாரும், உயிர் நீத்த செய்தி அறிந்த திலகவதியார் தானும் உடன் கட்டை ஏற முடிவு செய்தார். அதனை அறிந்த மருள்நீக்கியார் தமக்கையாரை வணங்கி அவ்வாறு செய்ய வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டார்.

திலகவதியாரும் தம்பியின் வேண்டுகோளுக்கு இணங்கி உயிர் நீத்தலைக் கைவிட்டார். தமக்கையின் பாதுகாப்பில் வளர்ந்த மருள்நீக்கியார் சகல கலைகளிலும் தேர்ந்து விளங்கினார். வாழ்க்கையில் ஏற்பட்ட துன்பமும், போதாமையும் அக்காலத்தில் பரந்திருந்த சமணசமயத்தின் மீது மருள்நீக்கியாருக்கு ஈடுபாட்டை ஏற்படுத்தியது. அதன் காரணமாக அவர் சமண சமயத்தைச் சார்ந்து அதன் கோட்பாடுகளை நன்கு கற்று தருமசேனர் எனும் பட்டத்தையும் பெற்றுக் கொண்டார். சிலகாலம் பாடலிபுத்திரம் என்ற இடத்தில் சமணசமயத் தலைவராக இருந்தார்.

தம்பியின் இத்தகைய செயலால் மனம் வருந்திய திலகவதியார் மீண்டும் அவரை சைவசமயத்தில் ஈடுபாடு கொள்ளச் செய்ய வேண்டும் என திரு வீரட்டானேச்சரத்தில் உறையும் பெருமானை வணங்கினார். அவரின் வேண்டுதலுக்கு மனம் இரங்கிய பெருமானும் மருள்நீக்கியாருக்குச் சூலை நோயைக் கொடுத்தார்.

நோயினைக் குணப்படுத்த சமணர்கள் பலவாறு முயன்றும் முடியவில்லை. நோய் அதிகரிக்க வலி பொறுக்க முடியாமல் தருமசேனர் தமக்கையிடம் வந்து சேர்ந்தார். திலகவதியாரும் அவரை திருவீரட்டானத்திற்கு அழைத்துச் சென்று திருவைந்தெழுத்தை ஓதி திருநீற்றை இட்டார். மருள்நீக்கியாரும் இறைவனை வணங்கி ''கூற்றாயினவாறு விலக்ககலீர்...'' என்னும் பதிகம் பாடினார். அச்சமயமே சூலை நோய் நீங்கியதுடன் ''நாவுக்கரசர் எனும் பெயர் பெறுவாய்'' என்று அசரீரியும் ஒலித்தது. அன்றிலிருந்து நாவுக்கரசர் என்ற பெயருடன் மீண்டும் சைவசமயத்தைச் சார்ந்தார்.

நாவுக்கரசர் பல தலங்களுக்குச் சென்று வழிபட்டதுடன், தலங்களில் உழவாரத் தொண்டு புரிந்து ஆலய சூழலைத் தூய்மைப்படுத்தி வரலானார். நாவுக்கரசரின் இந்நிலையை அறிந்த சமணர்கள் பல்லவ மன்னனிடம் முறையிட்டனர். சமண சமயத்தைச் சார்ந்த பல்லவ மன்னனும் நாவுக்கரசரை அழைத்துவரும்படி தன் அமைச்சர்களை அனுப்பினார். நாவுக்கரசர் ''நாமார்க்கும் குடியல்லோம்...'' என்னும் பதிகம் பாடி தன் மறுப்பைத் தெரிவித்தார். அமைச்சர்களோ அச்செய்தியை தாம் மன்னரிடம் சொல்வதால் தமக்கு ஏற்படப்போகும் துன்பங்களைப் பற்றி எடுத்துக் கூறியதும் அவர்களோடு நாவுக்கரசர் செல்ல இசைத்தார். மன்னனும் அவரைச் சமணர் கூறியது போன்று நீற்றறையில் இட்டனர். நீற்றறையில் இருந்த நாவுக்கரசர் ''மாசில் வீணையும்..'' என்ற பதிகம் பாடி சிவனை நினைத்து மகிழ்ந்தார். ஏழுநாட்களின் பின் நீற்றறையைத் திறந்து பார்த்த சமணர்கள் நாவுக்கரசரின் நிலை கண்டு அதிசயித்தனர். இவ்வாறு பல துன்பங்களைச் செய்தும் பாதிக்கப்படாதிருந்த நாவுக்கரசரை சமணர்கள் இறுதியாக கல்லுடன் கட்டிக் கடலில் போட்டார்கள். அப்போது ''சொற்றுணை வேதியன்...'' என்னும் பதிகத்தைப் பாடக் கல் தெப்பமாக மாறி நாவுக்கரசரைக் கரையில் கொண்டு வந்து சேர்த்தது. இதனை அறிந்த முதலாம் மகேந்திர பல்லவ மன்னனும் தான் செய்த துன்பங்களுக்கு வருந்தி நாவுக்கரசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கியதுடன் தானும் சைவ சமயத்தைத் தழுவினான்.

நாவுக்கரசர் பல தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு, திருப்பெண்ணாடகம் என்ற தலத்தை அடைந்தார். அங்கு இறைவனை வணங்கி தன் மீது சூல இடபக்குறிகளை பொறித்தருள வேண்டிப் பெற்றார். அங்கிருந்து, தில்லைக்குச் சென்று இறைவனை வணங்கிப் பதிகங்கள் பாடினார். அச்சமயத்தில் சீர்காழிப்பகுதியில் வாழ்ந்த திருஞானசம்பந்தர் பற்றிய பெருமைகளைக் கேள்வியுற்று, அவரைக் காண்பதற்காக அங்கு சென்றார். அத்தலத்தில் நாவுக்கரசரை சந்தித்த சம்பந்தர் ''அப்பரே'' என அழைத்து மகிழ்வுடன் வரவேற்று உபசாரம் செய்தார். அப்பரும் சிலகாலம் அத்தலத்தில் சம்பந்தருடன் தங்கியிருந்தார்.

சிலகாலம் சீர்காழிப் பதியில் சம்பந்தருடன் தங்கியிருந்த அப்பர் மீண்டும் தல யாத்திரையைத் தொடங்கினார். அவ்வாறு செல்கையில் திங்களூரில் அப்பூதியடிகள் என்ற அடியார் தன் மீது கொண்ட அன்பினாலும் பக்தியினாலும் தன் புதல்வர்களுக்கும், அறச்சாலை, கிணறு, குளம், தண்ணீர் பந்தல் முதலான வற்றிற்கும் திருநாவுக்கரசர் பெயரையிட்டு தொண்டு செய்தமையை அறியலுற்றார். அவரைக் காண விரும்பி நாவுக்கரசரும் அங்கு சென்றார். அவரும் அப்பரை வணங்கித் திருவமுது செய்யுமாறு வேண்டினார். அதற்கு நாவுக்கரசரும் இசைந்தார். அங்கு திருவமுது படைப்பதற்காக வாழையிலை வெட்டச் சென்ற மூத்த நாவுக்கரசன் பாம்பு தீண்டி இறந்துவிட்டான். இந்நிகழ்வு நாவுக்கரசரின் திருவமுதுக்குத் தடையாக அமையக் கூடாது என எண்ணிய அப்பூதியடிகளும் மனைவியாரும் உடலை மறைத்து வைத்தனர். நாவுக்கரசர் தன்னோடு திருவமுதுண்ண குழந்தைகளையும் அழைத்தார். பெற்றோர் மனம் கலங்கி நின்றனர். இறை செயலால் நடந்தவற்றை அறிந்த நாவுக்கரசர் 'ஒன்றுகொலாம்...' என்னும் பதிகம் பாடி மூத்த திருநாவுக்கரசனை உயிர்ப் பெற்றெழச் செய்தார். அங்கு அனைவருடனும் மகிழ்ச்சியாக திருவமுதுண்டார்.

பின்னர் அங்கிருந்து பல தலங்களுக்கும் சென்று தரிசித்துக் கொண்டு திருப்புகலூரை அடைந்தார். அங்கு சம்பந்தரும் வந்து சேர்ந்தார். இருவரும் பல தலங்களைத் தரிசித்தனர். அச்சமயத்தில் திருவிழிமிழலையில் மக்கள் பஞ்சத்தால் வாடியதைக் கண்டு இரங்கி பதிகம் பாடி படிக்காசு பெற்று மக்களின் பஞ்சத்தைப் போக்கினார். பின் திருமறைக்காடு சென்று நீண்டகாலமாக மூடியிருந்த திருக்கோயிலின் கதவைத் திறக்க அப்பர் பதிகம் பாடினார். திறந்த கதவை மூடுவதற்கு சம்பந்தர் பதிகம் பாடினார்.

திருப்பைஞீலி என்ற தலத்தில் இறைவன் அருளால் பொதிச் சோறு பெற்று உண்டார். அங்கிருந்து திருக்காளத்திற்குச் சென்று இறைவனை வழிபட்டு திருக்கையிலை யாத்திரையை மேற்கொண்டார். மூப்பின் காரணமாக யாத்திரையைத் தொடர முடியவில்லை. எனவே, வேத நாயகனே! என் கண்ணினால் திருக்கைலாயத்தில் வீற்றிருக்கும் உம் திருக்கோலத்தை கண்டு தொழும்படி எனக்கு நயந்து அருள் புரியும் என்று பணிந்தார். அடியார்கள் வேண்டுவதை வேண்டியவாறு அருளும் இறைவன் ''நாவுக்கரசனே நீ இந்தப் பொய்கையில் மூழ்கி திருவையாற்றில் வீற்றிருக்கும் காட்சியைக் காண்பாயாக'' என்று அசிரீரீயாக அருளினார். அப்பரும் அவ்வாறே செய்து திருவையாற்றில் கைலைக் காட்சியைக் கண்டு மகிழ்வுற்றார்.

அங்கிருந்து பாண்டி நாட்டுத் தலங்களை வழிபட்டு உழவாரத் தொண்டு புரிந்தார். அப்பரின் உழவாரத் தொண்டின் சிறப்பை உணர்த்துவதற்காக இறைவன் அப்பர் உழவாரத் தொண்டு செய்த இடங்களிலெல்லாம் பொன்னும் மணியும் கிடைக்கச் செய்தார். அவற்றை எவ்வித வேறுபாடும் இல்லாது பற்றற்ற நிலையில் வீசி எறிந்தார். இப்படி இருந்த காலத்தில் இறையடி சேர எண்ணிய அப்பர்

எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ...' என்ற பதிகம் பாடினார். அவரின் வேண்டுதற் படி எண்பத்தோராவது வயதில் சித்திரைச் சதயத்தன்று இறையடி சேர்ந்தார்.

### பாடச் சுருக்கம்

- திருமுனைப்பாடி நாட்டின் திருவாமூரில் புகழனார்க்கும் மாதினியாருக்கும் மகனாகப் பிறந்தார்.
- நாவுக்கரசர் சைவ சமயமே மெய்ச்சமயம் என உணர்ந்து கொண்டார்.
- இறையடியார்களின் துன்பங்களை தகுந்த வேளையில் இறைவன் நீக்குவார்.
- நாவுக்கரசரும் சம்பந்தரும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள்.
- நாவுக்கரசர் சமயப் பணிகளும் சமுதாயப்பணிகளும் செய்த அடியவராவார்.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. திருநாவுக்கரசரின் தாய், தந்தை, தமக்கையாரின் பெயர்களைத் தருக.
2. சமணர்கள் நாவுக்கரசருக்கு செய்த தீங்குகள் 3 தருக.
3. நாவுக்கரசர் உழவாரப்படையாளி என்று ஏன் அழைக்கப்பட்டார்?
4. நாவுக்கரசரின் பெயரில் திருப்பணிகள் செய்த சிவனடியார் யார்?
5. திருநாவுக்கரசரின் பற்றற்ற நிலையினைச் சுருக்கமாக விளக்குக.

### செயற்பாடு

நாவுக்கரசரின் குருபூசைத் தினத்தை ஆசிரியரின் உதவியுடன் கொண்டாடுக.

# சுந்தரமூர்த்தி நாயனார்



திருக்கைலையில் சிவபெருமானின் அடியவராக விளங்கிய ஆலாலசுந்தரர் நந்தவனத்தில் ஒரு நாள் பூப்பறிக்கச் சென்றார். அங்கு உமாதேவியாரின் சேடியர்களான அநிந்திதையார், கமலினியார் ஆகிய இருவர் மீதும் காதல் வயப்பட்டார். இதனை அறிந்த இறைவன் பூலோகம் சென்று இருவரையும் மணம் புரிவீர்கள் எனக் கூறினார். அப்போது ஆலாலசுந்தரர் இறைவனிடம் தான் பிற ஆகாமிய வினைகளில் ஈடுபடாது தடுத்தாட்கொள்ள வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். அதற்கிணங்க ஆலாலசுந்தரர் பூவுலகிற் பிறந்தார்.

திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் சடையனாருக்கும் இசை ஞானிக்கும் மகனாக சுந்தரர் அவதரித்தார். பெற்றோர் இவருக்கு சூட்டிய பெயர் நம்பியாரூரர் என்பதாகும். அந்நாட்டு அரசன் நரசிங்க முனையரையர் நம்பியாரூரின் அழகில் மயங்கித் தம் குழந்தையாக வளர்க்கலானார். இவ்வாறு அரசன் மகனாக வளர்ந்த நம்பியாரூரர் திருமணப் பருவத்தை அடைந்தார். அவருக்கு புத்தூர் சடங்கவி சிவாச்சாரியாரின் மகளைத் திருமணம் முடிக்கப் பெரியோர் நிச்சயித்தனர்.

திருமண நாளன்று ஒரு கிழவேதியர், நம்பியாரூரர் தம் அடிமை என அவர் பாட்டன் ஓலை எழுதித் தந்துள்ளார் என்றும், தனது அனுமதியின்றி அவர் திருமணம் செய்யக் கூடாது என்றும் கூறினார். அங்கிருந்த அனைவரும் அதிர்ச்சியுற்றனர். சுந்தரரும் அவரைப் பித்தனோ என்று ஏளனம் செய்து சிரித்தார். அடிமை என்பதற்கு ஆதாரமான ஓலையைக் காட்டும் படிக் கேட்டார். அவரும் ஓலையைக் காட்ட அதனைப் பறித்து கிழித்தெறிந்தார். வேதியர் அது படி ஓலை என்றும் மூல ஓலை பத்திரமாக தன்னிடம் உண்டு எனவும் கூறி அதனை எடுத்து அவையோரிடம் காட்டினார். அதன் உண்மைத் தன்மையை உணர்ந்த அவையோர் நம்பியாரூரரை கிழவேதியரின் அடிமை என உறுதி செய்து அவருடன் அனுப்பி வைத்தார்கள்.

கிழவேதியரும் தம் ஊரான திருவெண்ணெய் நல்லூரிற்கு நம்பியாரூரரையும் அவையோரையும் அழைத்துச் சென்று திருக்கோவிலின் உள்ளே சென்று மறைந்து விட்டார். அப்போது இறைவன் இறைவியுடன் தோன்றி நம்பியாரூரரை தாம் தடுத்தாட் கொண்டமை பற்றிக் கூறி ''நம்மை மண்ணுலகில் இன்சொல்லால் தமிழில் பாடுவாயாக'' என்று பணித்தார். தாம் என்ன பாடுவது

எனத் தயங்கிய சுந்தரருக்கு என்னை பித்தா என அழைத்தமையால் அவ்வடியிலேயே தொடங்கிப் பாடு எனப் பணித்தார். அவ்வாறே சுந்தரரும் ''பித்தா பிறை சூடி...'' என்னும் பதிகத்தைப் பாடினார். இறைவனை வன்மையான சொற்களால் அழைத்தமையால் சுந்தரர் வன்தொண்டர் எனப் பெயர் பெற்றார்.

அதன் பின்னர் சுந்தரர் பல தலங்களுக்கும் யாத்திரை சென்று பதிகம் பாடி இறைவனை வழிபட்டு வந்தார். திருக்கைலையில் வாழ்ந்த கமலினியார் திருவாரூரில் பரவையார் என்ற பெயருடன் விளங்கினார். திருவாரூர் வந்த சுந்தரர் பரவையாரைக் கண்டு மயங்கினார். பரவையாரும் சுந்தரர் மீது காதல் கொண்டார். இருவர் நிலைமையும் உணர்ந்த இறைவன் அடியவர் கனவில் தோன்றி இருவருக்கும் திருமணம் செய்து வைக்கும்படி கூறினார். அவ்வாறே அடியவர்கள் இருவரது திருமணத்தையும் சிறப்புற நடத்தி வைத்தனர்.

ஒருநாள் சுந்தரர் திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் வீற்றிருந்த அடியார்களைக் கண்டு அவர்களை வணங்காது இறைவனை வணங்கச் சென்றார். அங்கு இறைவன் அடியவர் பெருமையை எடுத்துக் கூறி அவர்களைப் போற்றிப்பாடும்படி ''தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும்...'' என்று அடியெடுத்துக் கொடுத்தருளினார். சுந்தரரும் அதன்படியே திருத்தொண்டத் தொகையைப் பாடி அங்கிருந்த அடியவர் அனைவரையும் வணங்கினார்.

சுந்தரர் பரவையாருடன் திருவாரூரில் வாழ்ந்து வந்த காலத்தில் குண்டையூர் கிழாருக்கு இறைவன் சுந்தரரின் பொருட்டு வழங்கிய நெல்லை பரவையாரின் இல்லத்துக்குக் கொண்டு செல்லத் திருக்கோளிலித் தலத்து இறைவனை நினைத்து ''நீள நினைந்தடியேன்...'' எனும் பதிகம் பாடினார். உடனே பூதகணங்கள் நெல் முழுவதையும் பரவையாரின் இல்லத்தில் சேர்த்தனர். பின் பல தலங்களுக்குச் சென்று இறைவனை தரிசித்த சுந்தரர் திருமுது குன்றத்து இறைவனிடம் பொன் வேண்டிப் பதிகம் பாடினார். இறைவனும் அவருக்குப் பன்னிரண்டாயிரம் பொற்காசுகளை அளித்தார். அவற்றைச் சுந்தரர் இறைவனின் ஆணைப்படி மணிமுத்தாற்றில் இட்டுத் திருவாரூர் குளத்தில் எடுத்தார்.

இவ்வாறாக சுந்தரர் பலத் தலங்களைத் தரிசித்து திருவொற்றியூர் வந்து சேர்ந்தார். அங்கு, திருக்கைலையில் உமையின் சேடிகளில் ஒருவரான அநிந்திதையார் சங்கிலியார் என்ற பெயரில் சிவத்தொண்டு செய்து வாழ்ந்து வந்தார். அவரைக் கண்டு காதல் கொண்ட சுந்தரர் இறைவன் துணையோடு அவரை மணம் முடித்தார். திருமணத்தின் பின் தான் சங்கிலியாரை எப்போதும் பிரிந்து செல்லமாட்டேன் எனச் சிவன் முன்னிலையில் சங்கிலியாரிடம் சத்தியம் செய்து கொடுத்தார். இருவரும் மகிழ்ச்சியாக திருவொற்றியூரில் வாழ்ந்து வந்தனர்.

அச்சமயத்தில் திருவாரூரில் திருவிழாக்கள் ஆரம்பமாகின. சுந்தரர் அங்கு சென்று ஆரூர்ப் பெருமானைத் தரிசிக்க எண்ணி யாரிடமும் கூறாமல் புறப்பட்டுச் சென்றார். திருவொற்றியூர் எல்லையைத் தாண்டியதும் சுந்தரரின் இருகண்களும் பார்வை இழந்தன. உடன் வந்தவர்களின் உதவியுடன் திருவெண்பாக்கம் சென்று இறைவனை வழிபட இறைவன் சுந்தரருக்கு ஒரு ஊன்று கோல் கொடுத்தருளினார். பின் காஞ்சிபுரம் சென்று வழிபட்டு இடக்கண்ணின் பார்வையை மீண்டும் பெற்றார். அங்கிருந்துப் பலத் தலங்களை வழிபட்டு திருவாரூரை அடைந்து ''மீளா அடிமை...'' என்னும் பதிகம் பாடி வலக்கண் பார்வையையும் பெற்றார். சங்கிலியாரை மணம் புரிந்த செய்தியை அறிந்த பரவையார் சுந்தரர் மீது கோபங் கொண்டிருந்தார். அவரின் கோபத்தைத் தணித்து சுந்தரருடன் சேர்த்து வைப்பதற்காக இறைவன் பரவையாரிடம் தூது சென்றார். பரவையாரும் பெருமானின் சொல்லுக்கிணங்கி சுந்தரருடன் இன்பமாக வாழலானார்.

ஒரு சமயம் சுந்தரர் தன் நண்பரான சேரமான் பெருமாளைக் காண்பதற்காகச் சேர நாட்டிற்குப் புறப்பட்டார். வழியில் அவிநாசித் தலத்தைத் தரிசிக்கச் சென்றபோது ஒரு வீட்டில் அழுகையொலியும் அதன் எதிர் வீட்டில் மங்கல ஒலியும் கேட்டது. அதன் காரணத்தைக் கேட்டறிந்தார் சுந்தரர். ஐந்து வயதுச் சிறுவர்கள் இருவர் குளத்தில் நீராடியபோது ஒருவனை முதலை விழுங்கிவிட்டது. முதலை விழுங்கிய சிறுவனின் வீட்டில் அவன் நினைவால் அழுகுரலும், மற்றைய சிறுவனுக்குப் பூணூல் சடங்கு நடைபெறுவதால் மங்கல ஒலியும் கேட்கின்றது எனக் கூறினர். அதனைக் கேட்டுத் துயரடைந்த சுந்தரர் அக்குளத்தைக் காட்டும்படி கேட்டார். அங்கு அவிநாசிப்பெருமானை வணங்கி ''எற்றான் மறக்கேன்...'' என்ற பதிகம் பாடி ''காரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே....'' என வேண்டி நின்றார். உடனே இறையருளால் முதலை உரிய வளர்ச்சியோடு அப்பிள்ளையை திருப்பிக் கொண்டுவந்து விட்டது. சிறுவனின் பெற்றோரும் மற்றோரும் பெருமகிழ்வு எய்தினார்கள்.

பின்னர், சுந்தரர் சேரமான் பெருமானைக் காணச் சென்றார். அவருடன் சிலகாலம் தங்கியிருந்து மலை நாட்டுத் தலங்களை வழிபட்டு வந்தார். இவ்வாறு இறை வழிபாடு செய்து வந்த சுந்தரர் இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட, திருவஞ்சைக்களத்து இறைவனை வேண்டி ''தலைக்குத் தலைமாலை....'' என்னும் பதிகம் பாடினார். சுந்தரரின் உளக்குறிப்பை அறிந்த இறைவனும் அவரைத் திருக்கைலைக்கு அழைத்து வரும்படி வெள்ளை யானையையும் தேவர்களையும் அனுப்பினார். இறை ஆணைப்படி சுந்தரர் கைலை செல்கையில் சேரமானை மனதில் நினைத்தவாறே சென்றார். இதனை உணர்ந்து கொண்ட சேரமான் பெருமாள் தன் வெள்ளைக் குதிரையில் தானும் சுந்தரருடன் கைலைக்குப் புறப்பட்டுச் சென்றார். திருக்கைலையை அடைந்த சுந்தரர் முன்பு

போல் ஆலால சுந்தரராகவும், சேரமான் பெருமான் சிவகணத் தலைவராகவும் தொண்டு புரிந்தார்கள். பரவையார், சங்கிலியார், இருவரும் கமலினி, அநிந்திதையாக மீண்டும் உமையம்மைக்குத் தொண்டு செய்தனர்.

சுந்தரரும் சேரமான் பெருமாளும் திருக்கைலையை அடைந்தது ஆடி மாதத்து சுவாதி நட்சத்திரத்தன்று ஆகும்.

### பாடச் சுருக்கம்

- திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் சடையனார்க்கும் இசைஞானியார்க்கும் மகனாகப் பிறந்தார்.
- ஆலால சுந்தரர் நம்பியாரூரராக பூவுலகில் அவதரித்தார்.
- இறைவனை வன்மையாகப் பேசியமையால் வன்றொண்டர் நாமம் பெற்றார்.
- அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தியுள்ளார்.
- தோழமையோடு தனது தேவைகளை இறைவன் மூலம் நிறைவு செய்தார்.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. சுந்தரர் பிறந்த இடம், தாய், தந்தை பெயர் என்பவற்றைத் தருக.
2. சுந்தரர் முதலில் பாடிய பதிகம் எது?
3. சுந்தரர் இடக்கண் பார்வை பெற்ற தலம் யாது?
4. சுந்தரர் புரிந்த அற்புதங்கள் இரண்டு எழுதுக.
5. சுந்தரரின் குரு பூசை தினம் யாது?

### செயற்பாடு

திருமணப்பந்தலில் இறைவனால் சுந்தரர் தடுத்தாட் கொள்ளப்பட்ட காட்சியை நாடகமாக நடித்துக் காட்டுக.

# மாணிக்கவாசகர்



பாண்டி நாட்டில் திருவாரூரில் சம்புபாத சிரியருக்கும் சிவஞானவதியாருக்கும் மகனாக மாணிக்கவாசகர் அவதரித்தார். இவர் திருவாதவூரில் தோன்றி சிறப்பெய்தியமையால் திருவாதவூரர் என அழைக்கப்பட்டார். கல்வியில் சிறந்து விளங்கிய திருவாதவூரரை அக்காலத்தில் அரசாண்ட அரிமர்த்தன பாண்டியன் என்பவன் தன் முதலமைச்சராக ஆக்கி அவருக்குத் ''தென்னவன் பிரமராயன்'' என்ற பட்டத்தைச் சூட்டிப் பல விருதுகளையும் அளித்தான். அறம் பிறழாமல் அரசன் ஆட்சி செய்யத் துணை நின்ற போதும் சிவன் மீது மாறா அன்போடு இருந்தார்.

ஒருமுறை அரசன் வாதவூரரிடம் பணம் கொடுத்துக் குதிரைகளை வாங்கி வரும்படி கூறி சில ஆட்களையும் உதவிக்கு அனுப்பினார். வாதவூரர் குதிரைகளை வாங்குவதற்காகக் கீழைக் கடற்கரை துறைமுகத்துக்குச் செல்லும் வழியில் திருப்பெருந்துறையை அடைந்தார். அவர் மனம் திருப்பெருந்துறை இறைவனின் பாற் சென்றது. எனவே உடன் வந்தவர்களை எல்லாம் அனுப்பிவிட்டு தான் மட்டும் திருப்பெருந்துறையிலேயே தங்கி இறைவனை வழிபட்டு வரலானார். இறைவனும் வாதவூரருக்கு ஞான உபதேசம் செய்து ஆட்கொண்டு அருளுவதற்காக குருந்த மரநிழலின் கீழ் சிவகணங்களைச் சீராக்கி சிவயோகியாக வீற்றிருந்தார். இதனைக் கண்ட திருவாதவூரர் அங்கு சென்று அவரை வணங்கி தன்னையும் சீடராக ஏற்கும்படி வேண்டிக் கொண்டார். இறைவனும் அவருக்கு தீட்சை அளித்து அருள் புரிந்தார். திருவாதவூரர் மாணிக்கவாசகர் என அழைக்கப்பட்டார்.

மாணிக்கவாசகர் தாம் குதிரை வாங்கக் கொண்டு வந்த செல்வங்களை எல்லாம் குருவின் ஆணைப்படி சிவ சேவைகளில் செலவு செய்தார். இதனை அறிந்த அரசன் மாணிக்கவாசகரை அழைத்து வரும்படி ஆட்களை அனுப்பினான். ''ஆவணி மூல நாளில் குதிரைகள் வரும்'' எனக் கூற அவன் ஆட்கள் அரசனிடம் சென்று அவ்வாறே கூறினார். குறித்த நாளில் குதிரைகள் வராமையால் சினமுற்ற அரசன் மாணிக்கவாசகரை சிறையிலிட்டு துன்புறுத்தினான். இறை சிந்தனையில் திளைத்திருந்த தன் அடியவர்களின் துயர் தீர்க்க இறைவனும் காட்டிலிருந்த நரிகளை எல்லாம் பரிகளாக்கி தானே தலைமைச் சேவகனாக வந்து அரசனிடம் குதிரைகளை ஒப்படைத்தார். அரசனும் தனது தவறை உணர்ந்து மாணிக்கவாசகரிடம் மன்னிப்புக் கேட்டதுடன் சிறையிலிருந்து விடுதலையும் செய்தார். ஆனால் அன்றிரவு பரிகளாக வந்த நரிகள் அனைத்தும்

மீண்டும் நரிகளாக மாறி அங்குள்ள ஏனைய குதிரைகளைக் கொன்றொழித்துவிட்டு காட்டுக்கு சென்றன. இச்செய்தி அறிந்த அரசன் மாணிக்கவாசர் மீது தாங்கொணா சினம் கொண்டார். அவரை வைகையாற்றின் சுடுமண்ணில் நிற்க வைத்து நெற்றியில் கல்லேற்றி துன்புறுத்தும்படி ஆணையிட்டான். அத்துன்பத்திற்குள்ளாக்கப்பட்ட தன் அடியவரான மாணிக்கவாசகரை காத்தற் பொருட்டு இறைவன் வைகை ஆற்றைப் பெருக்கெடுக்கச் செய்தார்.

அந்நிகழ்வின் மூலம் மாணிக்கவாசகரின் பெருமையை அரசனும் மக்களும் உணர்ந்தனர். மாணிக்கவாசகரும் அமைச்சர் பதவியைத் துறந்து திருப்பெருந்துறைக்குச் சென்று வழிபட்டுத் தில்லையை அடைந்தார். அங்கு ஈழநாட்டரசன் தில்லையில் பௌத்த மதத்தைப் பரப்பும் நோக்கோடு பௌத்தக் குருமாருடனும் தன் ஊமைப் பெண்ணுடனும் வந்திருந்தான். பௌத்தக்குருமார் தில்லையில் இருந்தவர்களை தன்னுடன் வாதுக்கழைத்தனர். இறைவன் தில்லைவாழந்தணரிடம் மாணிக்கவாசகரை பௌத்தருடன் வாதம் செய்ய அழைத்து வரும் படி கனவில் கூறியருளினார். அவர்களும் அவ்வாறே செய்தனர். மாணிக்கவாசகர் பௌத்தக்குரு கூறிய பௌத்த கொள்கைகளைக் கேட்டுப் பின் சைவ நெறிக் கொள்கைகளை அவருக்கு எடுத்துரைத்தார். அவர்கள் அதனை ஏற்றுக் கொள்ளாமல் மறுத்து வாதம் செய்தனர். மாணிக்கவாசகர் இறைவனை வணங்க இறையருளால் பௌத்தர்கள் அனைவரும் ஊமையாகினார்கள். இச்செயலைக் கண்டு ஆச்சிரியப்பட்ட அரசன் தன் ஊமை மகளை பேசவைக்க வேண்டும் என மாணிக்கவாசகரிடம் பணிந்து கேட்டான் சைவநெறி பற்றிக் கேள்விகள் கேட்ட அவள் ஊமைத்தன்மை நீங்கி விடைபகர்ந்தாள். இதனால் மகிழ்ச்சியடைந்த சிங்கள அரசன் சைவசமயத்தைத் தழுவியதுடன் இலங்கையிலும் சைவசமயத்தை வளர்க்கும் பணியில் ஈடுபட்டான்.

ஒரு நாள் இறைவன் அந்தணர் உருவில் வந்து மாணிக்கவாசகரிடம் அவர் பாடிய திருவாசகச் செய்யுள்கள் யாவற்றையும் கூறும்படிக் கேட்டு, அவர் சொல்லச்சொல்ல இறைவன் தானே எழுதினார். மறுநாள் நடராசரின் திருவடியில் ஓர் ஏட்டுப்பிரதி வைக்கப்பட்டிருந்தது. அதில் ''வாதவூரன் விளம்பிட அழகிய திருச்சிற்றம்பலமுடையார் எழுதியது'' என்ற அடிக்குறிப்பைக் கண்டு அனைவரும் வியந்தனர். அதனால் தில்லை வாழ் அந்தணர்கள் மாணிக்கவாசகரிடம் அவ்ஏட்டைக் காட்டி அப்பாடல்களின் பொருளைக் கூறுமாறு கேட்டார்கள். மாணிக்கவாசகரும் அவர்களை அழைத்துச் சென்று தில்லையின் கூத்தப்பெருமானைச் சுட்டிக்காட்டி, ''இவனே அதன் பொருள்'' எனக் கூறி இறைவனுடன் இரண்டறக் கலந்தார். இந்நாளே ஆனிமாத மக நட்சத்திரம் ஆகும்.

### பாடச் சுருக்கம்

- மாணிக்கவாசகர் திருவாதவூரில் சம்புபாதசிரியார்க்கும் சிவஞானவதியாருக்கும் மகனாகப் பிறந்தார்.
- திருப்பெருந்துறையில் ஆட்கொள்ளப்பட்டார்.
- இறைவன் அடியவர்களின் துன்பங்களை நீக்குபவன்.
- திருவாசகம் திருக்கோவையார் என்பன மாணிக்கவாசகரால் பாடப்பட்டன.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. திருவாதவூரரின் பெற்றோர் பெயர்கள் யாவை?
2. நரிகளைப் பரிகளாக்கி அரண்மனைக்கு கொண்டு வந்தவர் யார்?
3. மாணிக்கவாசகர் பாடிய நூல்கள் எவை?
4. மாணிக்கவாசகரின் குரு பூசைத் தினம் யாது?

### செயற்பாடு

1. மாணிக்கவாசகர் என்ற தலைப்பில் வகுப்பறையில் பேச்சொன்றை நிகழ்த்துங்கள்.

2. வெள்ளிக்கிழமைகளில் உங்கள் பாடசாலைப் பிரார்த்தனை மண்டபத்தில் ஓதப் பெறும் சிவபுராணப் பாடலில் உள்ள ஐவைந்து அடிகளுக்குரிய கருத்தை அடிப்படையாக்கி ஒவ்வொருவம் சிவபுராணம் தொடர்பான நற்சிந்தனையைத் தயாரித்துக் காட்டுக.

## 5.2 ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர்

ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சருடைய வாழ்க்கை பக்தியை மக்களுக்குப் போதிக்கின்றது. அவருடைய தெய்வீக அன்பு நிறைந்த வாழ்க்கை மக்கள் வாழ்விற்கு ஒரு தூண்டு கோலாக அமையட்டும் என்று மகாத்மாகாந்தி குறிப்பிட்டுள்ளார்.



ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர்

இத்தனை சிறப்பு மிக்க மகான் இராமகிருஷ்ணர். 1836ஆம் ஆண்டு மாசிமாதம் 18ஆம் திகதி காமாப்புகூர் என்ற கிராமத்தில் அவதரித்தார். இவருடைய தந்தையார் குடிராம் சட்டர்ஜி. நேர்மையே உருவானவர். சிறந்த பக்திமான். அந்தணர் குலப்பெரியார். அவருக்கும் சந்திரமணி அம்மையாருக்கும் அவதார புருஷராகப் பிறந்த இராமகிருஷ்ணருடைய இளமைப் பெயர் கதாதரர். காயாவில் எழுந்தருளிய விஷ்ணுவின் அனுக்கிரகத்தால் பிறந்த குழந்தை என்றபடியால் அவரது பெயரையே குழந்தைக்குச் சூட்டி மகிழ்ந்தனர் பெற்றோர்.

கதாதரர் கிராமப் பள்ளிக்கூடத்தில் ஆரம்பக் கல்வியைக் கற்றார். ஒருமுறை கேட்ட பாடத்தை அப்படியே ஒப்புவிக்கும் ஞாபகசக்தி மிகுந்த கதாதரரருக்குப் பாடசாலைக் கல்வியில் ஈடுபாடு இருக்கவில்லை.

எந்நேரமும் களிமண்ணால் இறைவனுடைய உருவங்களைச் செய்தும் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டும், நடித்துக் கொண்டும் தமது இளமைப் பருவத்தைக் கழித்தார். நுண்கலைகளில் மிக்க ஆர்வம் கொண்டவராக விளங்கியபடியால் இனிமையாகப்பாடும் ஆற்றல் கைவரப்பெற்று விளங்கினார். அத்தோடு எந்நேரமும் சிரிக்கச் சிரிக்கப் பேசும் குணம் கொண்டவராதலால் காமாப்புகூர் கிராமத்துப் பெண்களின் செல்லப்பிள்ளையாக விளங்கினார்.

கதாதரர் ஒரு வயல் வெளியில் நடந்து கொண்டிருக்கும் பொழுது இருண்ட வானத்தையும் வெள்ளைக் கொக்குக் கூட்டத்தையும் கண்டு அந்த அழகிலே மனதைப் பறிகொடுத்தார். இயற்கையிலே இறைவனைக் கண்ட கதாதரர் வெளியுணர்வு நீங்கப் பெற்று அவ்விடத்திலேயே சமாதி நிலை கைவரப் பெற்றார். இதுவே அவர் பெற்ற முதல் சமாதி நிலையாகும்.

இரண்டு ஆண்டுகளின் பின் ஒரு சிவராத்திரி தினத்தன்று கதாதரர் சிவன் வேடம் பூண்டு நாடகம் நடித்த பொழுது சமாதி நிலை கைவரப்பெற்று ஆடாமல் அசையாமல் அப்படியே இருந்துவிட்டார். பார்த்துக் கொண்டிருந்த மக்கள் பரவசமடைந்து மௌனமாக இருந்தனர். மக்களுக்கு உண்மையான சிவராத்திரியாகவே அன்றைய நாள் அமைந்துவிட்டது.

கதாதரருக்கு அவருடைய 9 ஆவது வயதில் உபநயனம் செய்யப்பட்டது. அன்று முதல் தம் தமையனார் ராம்குமாருடன் குல தெய்வத்திற்குப் பூசை செய்யத் தொடங்கினார். 1843 ஆம் ஆண்டு திடீரென அவருடைய தந்தையார் மரணமானார். அந்த இறப்பு நிகழ்வு அவரை வாழ்வின் நிலையாமையைச் சிந்திக்கச் செய்தது. அதனால் அவர் மேலும் ஆத்மீக உணர்வு கைவரப் பெற்று தட்சிணேஸ்வரத்தில் ஜகன்மாதாவைக் காண வேண்டும் என்ற விருப்பத்தைத் தூண்டியது. 1855ஆம் ஆண்டு ராணி ராசமணியின் உதவியால் தேவி பிரதிட்டை செய்யப்பட்டு தட்சணேஸ்வர ஆலய கும்பாபிஷேகம் நடைபெற்றது. முப்பது வருடங்களுக்கு மேலாக இவ்விடமே இராமகிருஸ்ணரின் ஆன்மீகப் பொக்கிஷம் வெளிவந்த இடமாக விளங்கியது. 1856ஆம் ஆண்டு சகோதரன் ராம்குமாரனின் மறைவையொட்டி இராமகிருஸ்ணரே பிரதம அர்ச்சகராக நியமிக்கப்பட்டார். இவர் பூசை செய்யும் ஆலயத்தில் எழுந்தருளியுள்ள காளிதேவியின் விக்கிரகம் இவர் மனதிலே உயிருள்ள அன்னையாகக் காட்சியளிப்பாள். அம்மனோடு பேசுவார். உணவூட்டிவிடுவார். விசிறி கொண்டு வீசுவார். படுக்கும்படி அழைப்பார். தெய்வீகபக்தியில் தன்னை மறந்தார். சூழ் நிலையை மறந்தார். ஒரு பைத்தியக்காரனாக மற்றவர்களுக்குத் தென்பட்டார். பைரவிப்பிராமணி என்னும் அம்மையாள் இவரது தெய்வீக நிலையை உணர்ந்து இவரை ஒரு அவதார புருஷர் என்று கூறினார்.

அன்னை பராசக்தியின் வழிபாடாகிய தந்திர ஆகமத்தில் புலமை மிக்கவர் பைரவிப் பிராமணி. அவர் மூலம் மூன்று நாட்களில் ஆன்மீக சாதனை புரிந்து இறை அநுபூதியைப் பெற்றார்.''நான் ஞானக் காட்சியில் அழகே உருவெடுத்த ராஜ ராஜேஸ்வரியைக் கண்டேன்'' என்று இராமகிருஷ்ணரே கூறியுள்ளார். உயிர்களை இறைவனிடமிருந்து பிரிப்பது மாயை என்ற சுவர்தான் என்றும் கூறினார்.

இராமகிருஷ்ணருடைய தெய்வப்பித்துக்கு மருந்து திருமணம் என்று தாயார் சந்திரமணி தீர்மானித்தார். அப்பொழுது இராமகிருஷ்ணர் ''ஜெயராம் பாடியில் வசிக்கும் இராமசந்திர முகோபாத்தியாரின் குடும்பத்தில் மணப்பெண் இருக்கிறாள்'' என்று கூறினார். அதன் படி ஐந்து வயது நிரம்பிய சாரதா அம்மையாருக்கும் இருபத்துமூன்று வயதுடைய கதாதரருக்கும் 1859ஆம் ஆண்டு திருமணம் நடைபெற்றது. இராமகிருஷ்ணர் தன் மனைவியை அன்னை பராசக்தியாகவே கண்டார். அது மட்டுமல்ல பிற பெண்களையும் அன்னை பராசக்தியாகவே கண்டார்.

இறைவனை ஆண்டானாகவும் தன்னை அடிமையாகவும் பாவித்து உறவு கொள்வது தாஸ்யம் (தாசமார்க்கம்) என்றும் இறைவனை குழந்தையாக காண்பது வாத்சல்யம் (சற்புத்திரமார்க்கம்) என்றும் இறைவனிடம் தோழமை பூணுவது சகியம் (சகமார்க்கம்) என்றும் இறைவனை நாயகனாகவும். தன்னை நாயகியாகவும் காண்பது மதுரம் (சன்மார்க்கம்) என்றும் கூறப்படுகின்றது. இராமகிருஷ்ணர் மதுர பாவனையைக் கடைபிடிக்கத் தொடங்கினார். உடல் உறக்கம் அனைத்தையும் மறந்தார். மக்களுக்குத் தொண்டு புரிவதற்காக இராமகிருஷ்ணர் உயர்ந்த நிர்விகற்ப சமாதியிலிருந்து இறங்கி வந்தார்.



பிற சமயங்களான இஸ்லாம், கிறிஸ்தவ சமயங்களைச் சார்ந்து மூன்று நாட்களிலே அம்மத பக்தி அனுபவங்களைப் பெற்றார். மேலும் புத்தரது போதனைளை நன்கு அறிந்து அவற்றிற்கும் உபநிடதங்களுக்கும் எவ்வித முரண்பாடும் இல்லை என்று கூறினார்.

1872 ஆம் ஆண்டு அன்னை சாரதாதேவி தமது 18வது வயதில் கணவராகிய இராமகிருஷ்ணருக்குப் பணிவிடை செய்ய வந்தார். இராமகிருஷ்ணர் தம் மனைவியாகிய சாரதா அம்மையாரிடம் ''உலகவாழ்க்கையில் என்னை இழுக்க விரும்புகிறாயா'' என்று கேட்டார். அதற்குச் சாரதாதேவி அம்மையார் சிறிதும் தயங்காது நான் உங்களுக்குச் சேவை செய்யவும், உங்களிடமிருந்து பரஞானத்தைக் கற்கவும் வந்துள்ளேன் எனக் கூறினார். மகிழ்ச்சியடைந்த இராமகிருஸ்ணர் காளி பூசை தினத்தன்று காளிதேவிக்காக அமைக்கப்பட்ட மேடையில் சாரதாதேவி அம்மையாரை அமர்த்தி சாஸ்திர முறைப்படி தேவிக்குச் செய்யும் எல்லாப் பூசைகளையும் செய்தார். சாரதாதேவி அம்மையாரே இராமகிருஷ்ணரின் முதல் சிஷ்யை ஆனார். இவருக்கு பல சிஷ்யர்கள் இருந்தார்கள் . அவர்களுள் முதன்மையானவர் சுவாமி விவேகானந்தர். சுவாமி சாரதானந்தர் என்ற சிஷ்யர் வங்க மொழியில் இராமகிருஷ்ணரின் சரிதத்தை எழுதியுள்ளார். இது ஆங்கிலத்தில் ''இராமகிருஷ்ணர் உயர்ந்த மகான்'' என்ற தலைப்புடன் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

சுவாமி விவேகானந்தர் ''நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா'' என்ற கேள்வியோடு இவரிடம் வந்தவர். ஸ்ரீ இராமகிருஷ்ணரின் ''அமுதமொழிகள்'' இவருடைய போதனை முறையின் சிறப்பை விளக்குகின்றன.

1885ஆம் ஆண்டு கோடை காலத்தில் தொண்டையில் சிறிது வலியையும் சூட்டையும் உணர்ந்தார். வைத்தியர்கள் அதிகம் பேச வேண்டாம் என்று கூறியும் கேட்காது பரவச நிலை எய்தியவுடன் பாடுவார், ஆடுவார். அதனால் தொண்டைப் புண்ணிலிருந்து இரத்தம் வரத் தொடங்கியது. 1885ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் கல்கத்தாவிலுள்ள சியாம் என்ற இடத்தில் ஹோமியோபதி டாக்டர் மகேந்திரலால் சர்க்கார் என்பவர் இவருக்கு மருத்துவம் செய்தார். அவ்விடம் சனம் நெரிசல் உள்ள இடம் ஆனபடியால் மார்கழி மாதம் காசி பூரில் உள்ள ஒரு தோட்டமாளிகையில் வைத்தியம் செய்தனர். அன்னை சாரதாதேவியும் உடனிருந்து உணவளித்துக் கவனித்து வந்தார். அங்கே விவேகானந்தருக்கு நிர்விகற்ப சமாதி கைகூடியது. இராமகிருஷ்ணர் நோய்வாய் பட்டிருந்ததால் பஜனை, கீர்த்தனை விவேகானந்தர் தலைமையில் நடைபெற்று வந்தன. இராமகிருஷ்ணர் விவேகானந்தரிடம் ''நான் இவர்கள் (சீடர்கள்) அனைவரையும் உன்னுடைய பாதுகாப்பில் விட்டுச் செல்கிறேன். இவர்கள் ஆன்ம சாதனை புரியும்படியும், வீட்டிற்குத் திரும்பாமலும் பார்த்துக்கொள்'' என்றார்.

இப்படியாக காசிப்பூரில் ஒன்பது மாதகாலம் வாழ்ந்தபின் இராமகிருஷ்ணர் தமது சீடர்களிடம் தமது தத்துவங்களைப் பரப்பும் பணியை ஒப்படைத்துவிட்டு 1886ஆம் ஆண்டு ஆவணி மாதம் 16ஆம் திகதி தம் பூத உடலை விட்டு நீங்கி மகாசமாதி அடைந்தார். இந்தியாவில் பலமொழிகளில் இராமகிருஷ்ணரின் அமுதமொழிகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

வேதாந்தத் தத்துவத்தைப் பேச்சோடு நிறுத்திவிடாமல் வாழ்ந்து காட்டியவர் இராமகிருஷ்ண பரமஹம்சர் ஆவார்.

பாடச் சுருக்கம்

- இவர் 1836ல் காமாப்புகூரில் அதிராம் சட்டர்ஜி சந்திரமணிதம்பதிக்கு மகனாகப் பிறந்தார்.
- ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் தெய்வீக வழியில் வாழ்க்கையை வாழ்ந்தார்.
- அவர் காளி மீது ஆழமான பக்தி கொண்டவர்.
- அவர் இறைபணிக்காகத் தன்னை அர்ப்பணித்தவர்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடையெழுதுக.

1. ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் எப்போது எங்கு பிறந்தார்?
2. அவருடைய தாய் தந்தையரின் பெயர் என்ன?
3. அவரது சமயப் பணி எவ்வாறானது?
4. அவர் கடைப்பிடித்த மார்க்கம் யாது?
5. ஸ்ரீ இராமகிருஷ்ணரின் முதற் சீடர் யார்?

## செயற்பாடு

ஸ்ரீ இரமகிருஸ்ண பரமஹம்சரைப் போன்ற சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை சேகரித்து ஒப்படை ஒன்று தயாரிக்க.

பரமஹம்சர் கூறியிருக்கும் குட்டிக்கதைகளில் சிலவற்றைத் தேடிச் சேகரித்து புத்தக வடிவில் ஆக்கப்படைப்பினை தயாரிக்குக.

# 6.1 பசு (ஆன்மா)

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு விளங்கும் சமயம் சைவசமயம் ஆகும். இச்சமயத்தின் கோட்பாடாகச் சைவசித்தாந்தம் அமைந்துள்ளது. இச்சைவசித்தாந்தம் பதி, பசு, பாசம் எனும் முப்பொருள்கள் பற்றிக் கூறுகின்றது. இவற்றை முறையே இறை, உயிர், தளை எனவும் கூறுவர்.

பசு என்றால் பாசத்தாற் கட்டுண்டது என்று பொருள். இவ்வுலகம் சிற்றறிவுடையவற்றையும், அறிவு இல்லாதவற்றையும் கொண்டது. அவற்றில் சிற்றறிவுடையவை உயிர் எனப்படும். அறிவற்ற உலகம் சடம் ஆகும். எனவே, சிற்றறிவுடைய உலகம் சேதனப் பிரபஞ்சம் என்றும் அறிவில்லாத (சட) உலகம் அசேதன பிரபஞ்சம் என்றும் கூறப்படும்.

ஆணவம், கன்மம், மாயை என்பன பாசம் என்றழைக்கப்படுகின்றன. பாசம் அறிவற்ற சடப்பொருளாகும். பதியானது பேரறிவுடையது என்பர். பசு அறிவற்ற சடமுமன்று. அறிவுள்ள சித்துப்பொருளும் அன்று. அது இவை இரண்டிற்கும் இடைப்பட்ட, சிற்றறிவுடைய பொருளாகும்.

சடமாகிய பாசம், அறிவித்தாலும் அறியமாட்டாதது. பேரறிவாகிய பதி, தானே அறியும் தன்மையுடையது. பசு ஒன்றையும் தானாக அறியாது, அறிவித்தால் அறியும் தன்மையுடையது. பசு சிற்றறிவுடையது என்பதால், தான் சார்கின்ற பொருளின் வண்ணமாக மாறும் தன்மை கொண்டது. இதனையே சார்ந்ததன் வண்ணமாதல் என்பர்.

**சதசத்து - விளக்கம்**

சத்து + அசத்து = சதசத்து ஆகும். பதி தோன்றி நின்று அழியும் தன்மையற்றதால் சத்து எனப்படும். தோன்றி, நின்று, அழியும் தன்மை கொண்ட பாசம் அசத்து எனப்படும். பசு இத்தோற்றக் கேடுகள் அற்றதாய்ச் சத்தைச் சார்ந்த போது சத்தாகவும், அசத்தைச் சார்ந்த போது அசத்தாகவும் விளங்கும். அதனால் பசுவை சதசத்து என்பர்.

பசு சதசத்தாக உள்ளது போன்று சிதசித்தாகவும் உள்ளது. அதாவது, சித்தும் (அறிவுடையதும்) ஆகாமல், அசித்தும் (அறிவற்றதும்) ஆகாமல் இரண்டிற்கும் இடைப்பட்டதாய் நிற்கும் நிலையாகும். எனவே, பதி சூக்கும

சித்து (ஒடுங்கியது) என்றும், பசு தூல சித்து (வெளிப்பட்டது) என்றும் குறிக்கப்படும்.

சூக்குமப்பொருள் பரந்ததும் (வியாபகம்), தூலப்பொருள் உள்ளடக்கியும் (வியாப்பியம்) அமைந்திருக்கும். பதியில் பசு தூலமாகவும், பாசத்தில் பசு சூக்குமமாகவும் விளங்கும். அதாவது, பதியில் பசு வியாப்பியமாகவும், பசுவில் பாசம் வியாப்பியமாகவும் இருக்கும், இதனை, கடல் போன்றது பதி, கடல் நீர் போன்றது பசு, அந்நீரில் கலந்துள்ள உப்புப் போன்றது பாசம் என்று விளக்குவர்.

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங் கொண்டு நிற்கும் ஆன்மாவைச் சகலர் என்பர். மாயை மலம் நீங்கி ஆணவம், கன்மம் ஆகிய இரு மலங்களுடன் இருக்கும் ஆன்மாவைப் பிரளயாகலர் என்பர். மாயை, கன்மம் ஆகிய இரு மலங்கள் நீங்கி ஆணவ மலம் மட்டும் கொண்ட ஆன்மாவை விஞ்ஞானகலர் எனப்படுவர். சிதசித்தாகிய ஆன்மா கருவிகளின்றி அறிவைப் பெறமாட்டாது. ஆன்மாவின் அறிவு எப்பொழுதும் ஆணவத்தால் மறைக்கப்பட்டது. இம்மறைப்பு நீங்கத்துணை செய்வன தனு, கரண, புவன, போகம் என்பனவாகும்

ஆணவ மலத்தோடு மட்டுமே கூடிய ஆன்ம அனுபவம் கேவலாவத்தை (பெத்தம்) ஆகும். ஆணவ, கன்ம, மாயை மல இணைப்பில் ஆன்ம அனுபவம் சகலாவத்தை எனப்படும் மும்மலங்களில் இருந்தும் நீங்கிய நிலையில் ஆன்ம அனுபவம் சுத்தாவத்தை எனப்படும்.

சகல நிலையில் ஆன்மாவானது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் முதலிய ஐந்து நிலைகளை ஐந்து இடங்களில் நின்று பெறும் அவையாவன சாக்கிரம் - புருவநடுவிலும், சொப்பனம் - கழுத்திலும், சுழுத்தி இதயத்திலும், துரியம் - நாபியிலும், துரியாதீதம் - மூலாதாரத்திலும் பெறுவதாகும்.

ஆன்மா சிற்றறிவுடைப் பொருளாதலால் அதற்கு இச்சை செயல் ஆகியன உண்டு. ஆன்மாவைப் பொறுத்தவரையில் இவை ஆணவத்தால் மறைக்கப்பட்டுக் கேவலத்திற் சிறிதும் தோன்றாமலும், சகலத்திற் சிறிது தோன்றியும், சுத்தத்தில் முற்றும் தோன்றியும் நிற்கும். கேவலம் இருள் போன்றது என்றும், சகலம் விளக்கின் ஒளி போன்றது என்றும் சுத்தம் சூரியஒளி போன்றது என்றும் விளக்குவர். எனவே கேவலம், சகலம், சுத்தம் என்பனவற்றை முறையே இருள்நிலை, மருள்நிலை, அருள்நிலை என்று கூறலாம்.

கேவலத்தில் இருந்த ஆன்மா இறைவனது திரோதான சக்தியாற் சகலத்திற்கு வந்து பிறப்பு இறப்புக்களில் உழலும். பின்னர் இருவினையொப்பு, மலபரிபாகம் ஏற்பட்டு இறைவனது அருட்சக்தியின் பார்வை பெற்று முத்தியடையும். அதாவது, இறைவனின் தாளினை அடையும் என்பதாம்.

### பாடச் சுருக்கம்

- சைவ சித்தாந்தம் முப்பொருள்கள் பற்றிக் கூறுகின்றது
- பசு என்பது பாசத்தால் கட்டுண்டது என்பது பொருள்.
- பசுவானது சார்ந்ததன் வண்ணமானது.
- மும் மலங்களின் பீடிப்பால் ஆன்மா மூன்று வகைப்படும்.
- ஆன்மாவானது ஐந்து நிலைகளைக் கொண்டிருக்கும்.
- ஆன்மா இறைவனது அருளால் ஞானம் பெற்று முத்தியடையும்.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடையளிக்கவும்.

1. முப்பொருள்களும் எவை?
2. மும்மலங்கள் எவை?
3. கேவலம், சகலம், சுத்தம் என்பவற்றை விளக்கி எழுதுக.
4. உயிர் ஏன் சதசத்து எனப்படுகின்றது?
5. மூவகை ஆன்மாக்களும் எவை?

### செயற்பாடு

பசுவின் இயல்புகளை பட்டியற்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

## 6.2 பஞ்சமா பாதங்களைக் கைவிடல்

மனிதப் பிறப்பின் நோக்கம் இறைவனை அடைதலாகும். இந்நோக்கத்தை அடைய புண்ணியங்களுடன் சிவத் தொண்டுகளையும் செய்து வருவதனால் கடவுளின் அருளைப் பெறலாம். பாசத்தாற் கட்டுண்ட பசுவானது பதியை வழிபட்டு முக்தி அடைய புண்ணியங்கள் செய்கின்ற அதே வேளை பஞ்சமா பாதகங்களையும் கைவிடல் வேண்டும்.

கொலை, களவு, கள்ளுண்ணல், பிறர் மனை நோக்கல் (காமம்), சூதாடல் என்பன பஞ்சமா பாதகங்கள் எனப்படுகின்றன. இவற்றிலிருந்தே ஏனைய பாவங்கள் தோன்றுகின்றன. இவற்றை கைவிடுவது மேலான வாழ்க்கைக்கு உதவும். பசுவானது ஆணவமலத்தாற் பீடிக்கப்பட்டிருப்பதனால் தான் செய்கின்ற பாவங்களை அறியாது. நல்வினையாற்றுதல் இம்மானிடப்பிறப்பின் நோக்கத்தை அடைய சிறந்த வழியாகும்.

எந்த ஓர் உயிரையும் கொலை செய்யாமை மேலான அறமாகும். கொலை என்னும் பாவம் பிற பாவங்களின் தீய விளைவுகள் எல்லாவற்றையும் தரும். உயிர்களிடத்தில் ஜீவகாருண்யம் மிக்கவனாக வாழ்தல் உயர்ந்த வாழ்வாகும். இதனையே திருமந்திர நூலாசிரியர் திருமூலர் ‘‘அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே’’ என்கிறார். உயிர்களிடத்தில் அன்பு செலுத்துவோமானால் கொலை எனும் மகாபாதகத்தைக் கைவிடலாம்.

திருடரை சமூகம் எப்போதும் வெறுத்து ஒதுக்கி வந்துள்ளமையினைக் காணலாம். மற்றவர்களின் பொருட்களின் மீது ஆசை கொள்வதே இப்பாவத்திற்குக் காரணமாகும். உடல் உழைப்பினால் கிடைக்கின்ற செல்வத்தை அனுபவிப்பதனால் ஏற்படும் இன்பமே நிலையானதாகும். களவு காரணமாக பொய் பேசும் நிலை ஏற்படுகிறது. பொய் சொல்வது மகா பாவமாகும்.

கள்ளுண்பவர்கள் தமது புகழையும், குடும்பத்தின் கௌரவத்தையும் கெடுப்பதுடன் தமது உடம்பையும் கெடுத்து நோய்க்கு உள்ளாகின்றனர். சூதாடுமிடத்தில் ஒருவருடைய காலம் கழியுமானால் அது அவருடைய பழமையாய் வந்த செல்வத்தையும் இயல்பான நற்பண்பையும் கெடுக்கும்.

> உடைசெல்வம் ஊண்ஒளி கல்வி என்று ஐந்தும்
> அடையாவாம் ஆயம் கொளின்

சூதாடலை ஒருவர் மேற்கொண்டால் புகழ், கல்வி, செல்வம், உணவு, உடை ஆகிய ஐந்தும் அவரைச் சேராமல் விலகிவிடும் என்கிறார் திருவள்ளுவர்.

நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறர்க்குரியாள் தோள்தோயா தார்

கடல் சூழ்ந்த உலகத்தில் நன்மைக்கு உரியவர் யார் என்றால் பிறரின் மனைவியை நோக்காதவர் ஆவார் என்று கூறுவது நோக்கத்தக்கது.

இறைவன் மீது பக்தி செலுத்துவதன் மூலம் மலங்களிலிருந்து விடுபட்டு ஆன்ம ஈடேற்றம் அடையலாம். இறைவன் மீது பக்தி செலுத்துவதற்கு பஞ்சமா பாதகங்களைக் கைவிடுவது அவசியமானதாகும். வாழ்க்கையில் வெற்றி பெற்ற மகான்கள், பெரியோர்கள், அருளாளர்கள் போன்றோர் இப்பஞ்சமா பாதகங்களைக் கைவிட்டவர்களாவர். எனவே அவர்கள் வழியில் சென்று நாமும் உயர்வோமாக.

## பாடச் சுருக்கம்

- ஆன்மா மும்மலங்களினால் பீடிக்கப்பட்டது. அதனால் பல பாவங்களைச் செய்கின்றது.
- பஞ்சமா பாதகங்களை கைவிட்டால் ஆன்மா வீடு பேறு அடையும்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. பஞ்மா பாதகம் என்றால் என்ன?
2. ஆன்மா பாவங்கள் செய்வதற்கு காரணம் என்ன?
3. உயர்வான வாழ்வு எனப்படுவது யாது?
4. ஆன்மா எதனால் பீடிக்கப்பட்டது?

## செயற்பாடு

'பஞ்சமா பாதகங்களைக் கைவிடல் வேண்டும்' என்ற தலைப்பில் ஆசிரியரின் உதவியுடன் மேடைப்பேச்சொன்றைப் பேசுங்கள்.

'ஒன்றாக நல்லது சொல்லாமை மற்றதன் பின்சாரப் பொய்மை நன்று" என்பது மாணவர்களுக்கு நல்ல உபதேசம் தரும் திருக்குறலாகும்.

# 7.1 பெண் தெய்வங்கள்

கிராமிய மக்களின் வாழ்க்கை எளிமையானதாகவும் விவசாயம் தொடர்பான இயற்கைக் கூறுகளை உள்ளடக்கியதாகவும் காணப்படுகின்றது. இம்மக்கள் தெய்வங்கள் பற்றிய நம்பிக்கை உடையவர்களாகவும் தங்களது தொழிலுக்காகவும், வாழ்வுக்காகவும் அத்தகைய தெய்வங்களை வழிபடுபவர்களாகவும் விளககினர். இத் தெய்வங்கள் கிராமிய தெய்வங்கள், நாட்டார் தெய்வங்கள், நாட்டுப்புறத் தெய்வங்கள் என்ற பெயர்களாலும் வழங்கப்படுகின்றன.

நாட்டார் தெய்வங்களுக்குரிய ஆலயங்கள் கிராமத்தின் எல்லைப் புறங்கள் கடற்கரையோரங்கள் கிராமத்தின் மத்திய குளக்கரை, காடு, நெல்வயல்கள், சந்தி முதலான இடங்களில் அமைந்துள்ளன. அத் தெய்வங்களுக்குக் கல்லினால் கட்டப்படும் ஆலயங்கள் மிகக் குறைவு தடிகள் கொண்டு சிறிய கொட்டகை அமைத்து அவற்றை ஓலையால் வேய்ந்து சூலம், கல் முதலானவற்றை வைத்து வழிபடும் மரபு காணப்படுகின்றது. நாட்டார் தெய்வ வழிபாட்டில் சிற்பக்கலை, விக்கிரகக்கலை முதலானவற்றுக்கு இடமில்லை; விசேட இசைக்கருவிகள் இசைக்கப்படுவதில்லை; பிராமண சமூகத்தைச் சாராத பூசகர்கள் அங்கு சடங்குகளை ஆற்றுப்படுத்துகின்றனர்.

நாட்டார் தெய்வ வழிபாட்டில் இடம்பெறும் பெண் தெய்வங்களுள் கண்ணகி, திரௌபதை ஆகிய தெய்வங்கள் பற்றி முன்னர் கற்றுள்ளீர்கள். காளி, பிடாரி, கொத்தி, நாச்சிமார் முதலான தெய்வங்கள் பற்றி இங்கு கற்போம். இத்தெய்வங்களின் தோற்றம் பற்றியும் அவற்றுக்குரிய வழிபாடு பற்றியும் பல்வேறு ஐதீகங்கள் காணப்படுகின்றன.

### (அ) காளி அம்மன்



சக்தியின் தோற்றங்களில் ஒன்று காளி அம்மன். காளியை வீரமாகாளி, பத்திரகாளி, சுடலைக்காளி என்னும் பெயர்களால் அடியார் போற்றி வழிபடுகின்றனர். காளி என்பவள் கரிய நிறத்தை உடையவள் என்பது பொருள் காளி வழிபாடு மிகப் பழமை வாய்ந்தது. தமிழ் மக்களிடம் போருக்குப் புறப்படுவதற்கு முன் வீரர்கள், பலி கொடுத்து வழிபடும் வழக்கம் இருந்தது.

காளியின் தோற்றம் பற்றி புராணங்களில் பல்வேறு ஐதீகங்கள் காணப்படுகின்றன. சும்பன்,

நிசும்பன் என்னும் இரு அசுரர்கள் தேவர்களுக்குப் பல்வேறு கொடுமைகளைச் செய்தார்கள் அதனால் தேவர்கள் தேவியிடம் சரணடைந்து தங்களுக்கு ஏற்பட்ட துன்பங்களை முறையிட்டனர். தேவி, அந்த அசுரர்களை அழிக்க தன் உடம்பில் இருந்து ஒரு சக்தியைத் தோற்றுவித்தாள். அச்சக்தியே காளி என்பது ஓர் ஐதீகம்.

காளியின் தோற்றம் பற்றிய மற்றொரு கதையும் உண்டு. முருகன் தாருகாசுரனை அழிக்க, போர் புரிந்தபோது சிந்திய இரத்தத்தில் இருந்து பல அசுரர்கள் தோன்றினர். அப்போது முருகன் தான் தாயாகிய உமையை நினைந்து வணங்கினார். அன்னை தனது அம்சம் கொண்ட காளியைத் தோற்றுவித்து, போர்க்களம் அனுப்பினார்.

காளி மங்கலம் தருபவள்; நோய்களில் இருந்து மக்களைப் பாதுகாப்பவள். தடைகள், துன்பங்களை நீக்கி அடியார்களைக் காப்பவள். பகைவர்களை அழிப்பவள். இத்தகைய நம்பிக்கையால் மக்கள் காளியை வழிபட்டு அத்தெய்வத்தின் அருளைப் பெறுகின்றனர்.

காளி அம்மன் வழிபாட்டில் நேர்த்தி வைத்தல், பொங்கல், படையல் என்பன இடம் பெறுகின்றன. யாழ்ப்பாணத்து மக்கள் சுகப்பிரவசம் வேண்டி, காளியின் பிரதிநிதியாகிய கொத்தியை வழிபட, மட்டக்களப்பு மக்கள் அதற்காக காளியம்மனை வழிபடும் மரபு காணப்படுகின்றது.



காளி அம்மன் வழிபாடு யாழ்ப்பாணம், வன்னி, வவுனியா, திருகோணமலை, மட்டக்களப்பு, பதுளை, சிலாபம், நீர்கொழும்பு, கொழும்பு முதலான பிரதேசங்களில் இடம் பெறுகின்றது. இவற்றில் ஆகம முறையில் அமைந்த ஆலயங்களும் அடங்கும்.

தமிழர் மத்தியில் விசுவகுல மக்களுக்கும் காளி வழிபாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு காணப்படுகின்றது. மட்டக்களப்பு, யாழ்ப்பாணம், திருகோணமலைப் முதலான இடங்களில் இதனை அவதானிக்கலாம். ஏறாவூர் பத்திரகாளியம்மன் ஆலயம், போரதீவு காளி கோயில், அன்னமலை காளிகோயில் என்பவற்றை இதற்கு எடுத்துக் காட்டாகக் குறிப்பிடலாம்.

## நாச்சியார்



நாட்டார் தெய்வ வழிபாட்டில் நாச்சிமார் வழிபாடும் ஒன்றாகும். இத்தெய்வம் அகோரத்தன்மையற்றது. 'நாச்சிமார்' என்னும் சொல் 'நீ'' என்ற சங்கத மொழியினின்றும் வந்ததாகும். 'நீ' என்பதற்கு வழிகாட்டுபவள், தலைவி என்றும் பொருள் உண்டு. எனவே, 'நாச்சி' என்பதற்கு வழிகாட்டுபவள் எனப் பொருள் கொள்வர். நாச்சிமாரை தாயாகவும், கன்னியாகவும், கற்புடைய மாதாவாகவும் மக்கள் போற்றி வழிபடுகின்றனர்.

நாச்சிமார், ஏழு கன்னி நாச்சிமார் எனவும் போற்றப்படுவார். இவருக்கும் சப்த கன்னியர் வழிபாட்டிற்கும் தொடர்பு உண்டு. சோழர் காலக் காட்டூர் கல்வெட்டு சப்தமாதர்களுக்குத் தனிக்கோயில் அமைக்கப்பட்ட வரலாற்றைக் குறிப்பிடுகின்றது. காலப்போக்கில் சப்தமாதர் வழிபாடு நாட்டார் தெய்வங்கள் என்ற வகையில் வழிபடப்படுகின்றது.

நாச்சிமார் வழிபாடு பற்றி செவி வழிக்கதைகள் உள்ளன. வன்னி அரசர்களின் மனைவியர் ஏழுபேரும், அரசர்கள் போரில் இறந்த பின் உயிர் வாழ விரும்பவில்லை. அதனால் உயிர் துறந்தனர் அந்த எழுவரையும் தெய்வப்பெண்களாக, ''நாச்சிமார்'' என்று போற்றி வழிபடப்படுவதாக கூறப்படுகின்றது.

நாச்சிமார் பற்றிய மற்றொரு செவிவழிக்கதையுண்டு. வன்னியில் வாழ்ந்த ஏழு நாச்சிமார்கள் போர்த்துகேயரின் கைப்பட்டு கற்பிழந்தனர். அவர்கள் உயிர் வாழ விரும்பாது மடிந்தனர் அவர்களது நினைவாகவே நாச்சிமார் வழிபாடு எழுந்தது என்பர்.

நாச்சிமார் வழிபாடு, இலங்கையில் சில இடங்களில் மட்டுமே காணப்படுகின்றது. குறிப்பாக, யாழ்ப்பாணம், திருகோணமலை, மட்டக்களப்பு, வெல்லாவெளி ஆகிய இடங்களில் அமைந்துள்ள ஆலயங்களைக் குறிப்பிடலாம். புகழ்பெற்ற நாச்சிமார் கோயில் முல்லைத்தீவு வட்டுவாகலில் உள்ளது. நாச்சிமாரை, சப்த கன்னிகளாக அங்கு வழிபடுகின்றனர். அங்கு பொங்கல், மடை ஏ்னபன வைத்து பூசாரிமார் பூசை செய்து வழிபடும் மரபு காணப்படுகிறது. ஒட்டுச்சுட்டானுக்கும் புதுகுடியிருப்புக்கும் இடையிலுள்ள மன்னாக்கண்டல் என்னும்

இடத்தில் புராதன நாச்சிமார் ஆலயம் ஒன்றின் அழிபாடுகள் சிதைந்து காணப்படுகின்றது.

காங்கேசன்துறையில் உள்ள வன்னியார் வளவில் வன்னி நாச்சியார் என்ற தெய்வ வணக்கம் உள்ள அக்கோயிலில் படிக்கப்படும் ஏட்டுக்கும், வன்னி நாட்டு நாச்சிமாரின் வாய்மொழி மரபுக் கதைகளுக்கும் இடையில் தொடர்பு காணப்படுகின்றது. இங்கும் வட்டுவாகலில் இடம்பெறும் பூசை முறையே பின்பற்றப்படுகிறது.

நாச்சிமார் வழிபாடு தொடர்பாக எழுந்த நூல்களில் வட்டுவாகல் அருணாசலக் கவிராயரின் சப்த மாதா தோத்திரம் முக்கியமானது.

### பிடாரி அம்மன்



நாட்டார் தெய்வங்களுள் ஒன்றான பிடாரி அம்மன், காளி அம்மனைப் போன்று பலி எடுக்கும் தெய்வமாகும். 'பட்டாரி' என்ற சமஸ்கிருதப் பெயரே 'பிடாரி' என மருவி வந்துவிட்டது. பிடாரி அம்மனை, முப்பிடாரி அம்மன் எனவும் தமிழ் நாட்டில் வழங்குவர்.

பிடாரி அம்மன், கிராமத்தின் எல்லையில் இருந்து மக்களைக் காத்து வருவதாக நம்புகின்றனர். இந்த நம்பிக்கை மிகப்பழங்காலந்தொட்டே மக்களிடம் நிலவி வருகின்றது. மக்களை நோய்களில் இருந்து மீட்கவும், பயிர்களையும், கால்நடைகளையும் காப்பதற்கும் பிடாரி அம்மன் வழிபடப்படுகின்றாள். ஆதலால், மக்கள் பிடாரி அம்மனை, காவல் தெய்வமாகப் போற்றி வழிபடுகின்றனர்.

தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்திலும், திருச்சி மாவட்டத்திலும் பிடாரி அம்மனுக்குக் கோயில் அமைத்து வழிபடுகின்றனர். அங்கு பத்து நாள் விழாவாக பொங்கல் நடைபெறுகின்றது. பிடாரி அம்மனை, மண்ணால் சிலை அமைத்தும் வழிபடுகின்றனர். இத்தெய்வத்துக்கு நான்கு கைகள் முதல் எட்டுக்கைகள் வரை அமைத்துள்ளனர்.

ஈழ நாட்டின் வடக்கு, கிழக்குப் பிரதேசங்களில் பிடாரி அம்மன் வழிபாடு இடம் பெறுகின்றது. இங்கும் காவல் தெய்வமாகப் போற்றும் மரபு காணப்படுகின்றது. அதனால் இப்பிரதேசங்களில் 'எல்லைப் பிடாரி' எனவும்

அழைக்கப்படுகின்றாள். யாழ்ப்பாணத்தில் ஆணைக்கோட்டை பிடாரி அம்மன் கோயில் நெடுந்தீவு முதலாம் வட்டாரம் பிடாரி அம்மன் கோயில் என்பன பிரசித்தமான பிடாரி அம்மன் கோயில்களாகும்.

இத்தெய்வத்துக்குப் பூசை செய்பவர் பிராமணர்களாக இருக்க வேண்டும் என்னும் கட்டுப்பாடில்லை. ஆலயத்தைத் தாபித்தவர்களின் சந்ததியினரோ அல்லது மக்களால் நியமிக்கப்பட்டவரோ பூசகராக இருப்பார்.

### கொத்தி

கொத்தி என்னும் பெண் தெய்வம், தமிழ் மக்களின் வழிபாட்டில் நீண்ட காலமாக நிலைத்து நிற்கின்றாள். இத்தெய்வம் சங்ககால பாலை நிலத் தெய்வமான் கொற்றவையின் மரூஉ என்று கூறப்படுகின்றது. 'கொத்தி' என்பதை 'கொற்றி' என்றும் குறிப்பிடுவர். கொத்தியைத் தெய்வ உணர்வுடன் வழிபடுவர். அதேவேளை அவள் கொடூரமான பயங்கர உணர்வினைத் தருபவள் எனவும் கருதுகின்றனர். இத்தெய்வம் சிவந்த கண்களையும், கொடிய தோற்றத்தையும் கொண்டவள்; கொத்திப்பேய், கொத்தியாத்தை, கொத்தியார் என்றெல்லாம் அழைக்கப்படுபவள்.

கொத்தித் தெய்வத்தை மகப்பேற்றுக்குரிய தெய்வமாக வணங்குகின்றனர். கொத்தியின் வடிவத்தை, மக்கள் சூல வடிவின் மூலம் வழிபடுகின்றனர். நெடுந்தீவு மக்கள் இத்தெய்வத்துக்கு நேர்த்தி வைத்து பொங்கலிட்டு வழிபடுகின்றனர்.

### ஐதீகக் கதை

கொத்தி வழிபாட்டுடன் தொடர்புடைய கதை ஒன்றுண்டு. முன்னொரு காலத்திலே பல வகைச் சக்திகளைப் பெற்றிருந்த இராட்சதன் ஒருவன் சிறு சிறு தெய்வங்களை வருதி அழித்து, மகிழ்ச்சி அடைந்தான். அவனால் சில தெய்வங்கள் அழிவுற்றன; வேறு சில ஆங்காங்கு மறைந்து ஒதுங்கின. சில மக்களிடம் சென்று அடைக்கலம் பெற்றன. அவ்வாறு அடைக்கலம் தந்த சமூகங்கள் அத்தெய்வங்களை தத்தம் தெய்வங்களாகக் கொண்டொழுகலாயினர். 'கொத்தி' என்னும் தெய்வம் பிள்ளை பெறும் வீட்டில் புகுந்து அடைக்கலமானதால் அது மருத்துவச்சியின் தெய்வமாகக் கருதப்பட்டது.

### வழிபடும் இடங்கள்

யாழ்ப்பாண மாவட்டத்தின் வடமராட்சி, தென்மராட்சி, தீவகம் ஆகிய இடங்களிலும் மட்டக்களப்பு முதலான இடங்களில் கொத்தி வழிபாடு காணப்படுகின்றது. நெடுந்தீவு குருக்கள் மடம் கொத்தியால் கோயில், கரவெட்டி

கொத்தியால் கோயில் என்பன அவற்றுள் அடங்கும். மட்டக்களப்பு மண்முனை பிரதேசத்தில் உள்ள கொத்தியாபுலை என்னும் கிராமத்தில் கொத்தியார் என்ற தெய்வத்துக்குச் சடங்கு செய்து வந்ததாகக் கூறப்படுகின்றது.

கொத்தியின் உறைவிடம் ஆலமரமாகும். அதனால் அம்மரம் 'கொத்தியால்' எனவும் அழைக்கப்படுகின்றது. 'கொத்திக்கும் படைத்தல்' என்னும் சடங்கை ஆலமரம் உள்ள இடங்களில் செய்வார். இது அந்திப் பொழுதில் இடம்பெறும். சோறு பலவகைக் கறிகள், வெற்றிலை முதலானவை அவற்றில் அடங்கும்.

நாட்டார் தெய்வங்களுக்குரிய வழிபாட்டு முறைகள் பிரதேசத்துக்குப் பிரதேசம் வேறுபட்டு அமைகின்றன. அத்துடன் இவ்வழிபாடு பற்றி மக்களிடையே மிகுந்த நம்பிக்கை காணப்படுவதால், இன்றுவரை நிலைத்து நிற்கின்றது.

### பாடச் சுருக்கம்

- நாட்டார் தெய்வ வழிபாடு நாட்டுப்புற மக்களுக்குரியது.
- நாட்டார் வழிபாட்டை, கிராமிய வழிபாடு எல்லைப்புற வழிபாடு, குல தெய்வ வழிபாடு என்ற பெயர்களாலும் அழைப்பர்.
- நாட்டார் வழிபாட்டின் பெண்தெய்வங்களுள் காளி, பிடாரி, கொத்தி, நாச்சிமார் என்பன சிறந்த காவல் தெய்வங்களாகும்.
- இப்பெண் தெய்வங்கள் யாவும் இலங்கையில் பரந்துபட்டளவில் வழிபடப்படுகின்றன.
- ஒவ்வொரு பெண் தெய்வங்களுக்கும் ஒவ்வொரு நோய்களைக் குணப்படுத்துவதாக கிராமிய மக்களால் வழிபடப்படுகின்றன.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை தருக.

1. நாட்டார் வழிபாடு என்றால் என்ன?
2. நாட்டார் தெய்வங்கள் குடிகொண்டிருக்கும் இடங்கள் யாவை?
3. காளி வழிபாட்டால் பெறப்படும் நன்மைகள் இரண்டு தருக.
4. இலங்கையில் காணப்படும் கொத்தியாலயம் ஒன்றைத் தருக.
5. இலங்கையில் புகழ் பெற்ற நாச்சிமார் ஆலயம் ஒன்றைத் தருக.

### செயற்பாடு

உமது பிரதேசத்தில் வழிபடப்படுகின்ற நாட்டார் பெண் தெய்வங்களைக் கூறி அவற்றின் வழிபாட்டு முறைகளை அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

# 8 (அ) கட்டுக்கலை ஸ்ரீ செல்வ விநாயகர் ஆலயம்

இயற்கை மணம் பரப்பும் மலைநாட்டின் எழில் மிகு மாநகரம் கண்டி. சமய வழிபாட்டுத் தலங்கள் நிறைந்த இந்நகரின் சிறப்பு மிகுந்த தலங்களில் ஒன்றே ஸ்ரீ செல்வ விநாயகர் ஆலயமாகும். இது கண்டி மாநகரில் கட்டுக்கலை என்ற இடத்தில் அமைந்துள்ளது.



ஸ்ரீ செல்வ விநாயகர் ஆலயம்

மலையகத்தின் தொன்மை மிகு பிள்ளையார் தலமாகக் காணப்படும் இவ்வாலயம் கண்டி அரசனாகிய கீர்த்தி ஸ்ரீ இராஜ சிங்கன் காலத்தில் (1752இல்) அமைக்கப்பெற்றது. இதன் மகா கும்பாபிஷேகம் 1988ஆம் ஆண்டு மிகச் சிறப்பாக நடைபெற்றது. இந்தியாவிலுள்ள தருமபுரத்து ஆதீனம் போல தெய்வச் செழிப்போடு காணப்படும் இவ்வாலயத்தில் மதபேதமின்றி இந்துக்களும், பௌத்தர்களும் சென்று வழிபடுவது பெருமை மிக்கதாகும்.

இவ்வாலயம் எவ்வாறு தோன்றியது என்பதற்கு ஒரு கதையுண்டு. விஜய நகரநாயக்க ஆட்சி தமிழ் நாட்டிலே நடைபெற்ற போது இந்து சமய வளர்ச்சிக்கான பல பணிகள் நடந்தன. அதேவேளை இலங்கையிலும் அதன் தாக்கம் ஏற்பட்டது. கண்டியிலும் இந்து சமய விழிப்புணர்வு இடம் பெற்ற வேளை 'செங்குந்த' என்னும் பிராமணர் ஒருவர் 'தலதா மாளிகை' அமைந்துள்ள இடத்துக்கு மேலே இருந்த குகை ஒன்றைத் தெரிவு செய்து அங்கு தியானம் மேற்கொண்டு வந்தார். முதலாம் விமல தர்ம சூரியன் போர்த்துக்கேயரை வென்று மன்னனாக முடி சூடினான். அவ்வேளை செங்குந்த வசித்த இடமும் இதற்குப் பக்கத்தில் இருந்த நாக விகாரையும் இந்துக்களாலும் பௌத்தர்களாலும் வழிபடும் தலங்களாக மாறின. பின்னர் அருணாச்சல செட்டியாரிடம் (கோட்டைச் செட்டி மரபினர்) இந்த ஆலய நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது. அவ்வாலயமே பிள்ளையார் கோயிலாக வளர்ந்து இன்று செல்வவிநாயகர் ஆலயமாக மிளிர்கின்றது.

கட்டுக்கலை விநாயகர் ஆலயத்தில் எழுந்தருளியுள்ள மூலமூர்த்தி செல்வவிநாயகர் ஆகும். இங்கு பிள்ளையார், முருகன், சோமசுந்தரப் பெருமான், பஞ்சமுக விநாயகர் முதலான தெய்வங்களுக்கும் சந்நிதிகள் உள்ளன. இவ்வாலயத்தின் சிறப்பிற்கு இரு காரணிகள் காரணமாகிறது.



மூலமூர்த்தி

1. புத்தருடைய புனிததந்தம் பவனியாக உலாவரும் பெரஹரா காலத்தில் இந்துத் தெய்வங்களும் முக்கியத்துவம் பெற வேண்டுமென்ற கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனின் வேண்டுகோள் விடுத்தமை.

2. பகற் பெரஹரா இவ்விநாயகர் ஆலயத்திலிருந்து தொடங்கப்படுகின்ற மரபு பேணப்படுகின்றமை.

இவ்வாலயத்தின் தீர்த்தம் சிறப்பு மிகு மகாவலி கங்கையாகும். இது ஆலயம் அமைந்துள்ள இடத்திலிருந்து சுமார் 5 கி.மீற்றர் தொலைவிலுள்ள கெட்டம்பே என்னுமிடத்தில் மகாவலி கங்கையின் நீர்நிலைப் பகுதியில் அமைந்துள்ளது. இந்நீர்நிலைப்பகுதியில் தான் ஆலய தீர்த்தோற்சவம் நடைபெறும்.

இவ்வாலயத்தின் வருடாந்த திருவிழா பங்குனி மாதந்தோறும் நடைபெறும். பங்குனி உத்தரத்திற்கு பத்து நாட்களுக்கு முன்னர் கொடியேற்றம் நடைபெறும். இவ்வாலயத்தில் பங்குனி உத்தரத்தன்று பஞ்சரதங்கள் பவனி வருகின்றன. மேலும், விநாயக சதுர்த்தி, கந்த சஷ்டி போன்ற விசேட காலங்களில் சிறப்பு பூசைகள் நடைபெறும்.

சிங்கள மக்கள் செறிந்து வாழும் கண்டிப் பிரதேசத்தில் அனைத்து மக்களும் சமய வேறுபாடின்றி செல்வ விநாயகரை வணங்கி அருளினைப் பெற்றுக் கொள்ளும் ஆலயமாக இது அமைகின்றது.



பஞ்சரதங்கள்



7. S. P. C. 120303

### பாடச் சுருக்கம்

- கட்டுக்கலை செல்வ விநாயகர் ஆலயம் கண்டி நகரில் கட்டுக்கலை எனும் இடத்தில் அமைந்துள்ளது.
- கண்டிய மன்னன் கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனால் 1752ல் அமைக்கப்பட்டது
- தலதா மாளிகையின் வழிபாட்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.
- பங்குனி மாதம் 10 நாட்கள் மகோற்சவம் இடம் பெறும்

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. கட்டுக்கலை செல்வ விநாயகர் ஆலயம் எங்கு அமைந்துள்ளது?
2. இவ்வாலயம் யாரால்? எப்போது அமைக்கப்பட்டது?
3. தலதா மாளிகைக்கும் இவ்வாலயத்திற்கும் இடையிலான உறவு எத்தகையது?
4. இவ்வாலயத்தின் வருடாந்த மகோற்சவம் எப்போது இடம் பெறுகின்றது?

### செயற்பாடு

இலங்கையில் உள்ள பிரசித்தி பெற்ற பிள்ளையார் ஆலயங்களைப் பட்டியற்படுத்துக.

## (ஆ) நகுலேச்சரம்


நகுலேச்சர விமானம்

ஈழத்துச் சிவாலயங்களுள் புராதன வரலாற்றுச் சிறப்பு மிக்கது நகுலேச்சரம். இது இலங்கையின் வடகரையிலுள்ள கீரிமலை என்ற இடத்தில் உள்ளது. ''மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தரிசித்தவனுக்கு வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்த்திடுவான்'' என்ற தாயுமானவரின் கூற்றுப்படி இம் மூன்றும் ஒருங்கே அமையப் பெற்ற சிவாலயமாக இது விளங்குகின்றது. அதனாலேயே உலகில் உள்ள பிரசித்தி பெற்ற ஆயிரத்தெட்டு சிவத்தலங்களுள் இதுவும் ஒன்றாக உள்ளது.

கீரிமலையின் புராதன பெயர் திருத்தம்பலை. அங்கு கோயில் கொண்டிருந்த பெருமான் திருத்தம்பலேசுவரர், இத்தலம் கீரிமலை என அழைக்கப்படுகின்றதற்க்கு கதை ஒன்று உண்டு. முன்னொரு போது மேருமலையின் ஒரு பக்கத்தில் சுதாமா என்னும் பெயருடைய முனிவர் ஒருவர் தவம் செய்து கொண்டிருந்தார். அவ்வேளை அவர் அருகே ஒரு வேடன் சென்றான். தன் தவத்திற்கு இடையூறு செய்த வேடனை சுதாமா முனிவர் சாபமிட, அவனுக்கு கீரிமுகம் வாய்க்கப் பெற்றது. இதனால் வருத்தமுற்ற வேடன் முனிவரை வணங்கி சாபவிமோசனம் தருமாறு மன்றாடினான். பின் முனிவரும் இரக்கம் கொண்டு வேதராணியத்திற்குத் தெற்கில் உள்ள கடலிலே இலங்கை என்ற தீவு உண்டு. அங்கே சென்று அதன் வடக்கே உள்ள மலையில் போய் கர்ம யோகம் செய்; கீரிமுகம் நீங்கும் என்றார். அத்தோடு கர்மயோகப் பயிற்சியையும் வழங்கினார். அவ்வேடன் அவ்வாறே இலங்கை வந்து கர்ம யோகம் செய்தான். அவ்விடத்தே உள்ள நீர்த்துறையில் நீராடினான். அவனது கீரிமுகம் நீங்கியது. அன்று முதல் அவ்வேடன் நகுல முனிவர் எனப்பட்டார். கீரி என்பது வடமொழியில் நகுலம் எனப்படும். கீரிமுகம் மாறிய இடம் கீரிமலை என்றும் நகுலகிரி என்றும் வழங்கப்பட்டு இன்று அத்தலம் நகுலேச்சரம் என்று அழைக்கப்படுகின்றது.


திருத்தம்பலேசுவரர்

நகுலமுனிவர் வணங்கிய இறைவன் நகுலேசுவரர் என்றும் இறைவி நகுலாம்பிகை என்றும் பெயர் பெற்றனர். இந்தக் கதையினை

‘வனம்சார் தீர்வை முகம் அகன்ற வாய்மை அதனால் இவ்வரைக்கும்’ என்ற நகுலகிரி புராணப் பாடலில் அறியலாம்.

நகுல முனிவரால் மட்டுமன்றி இராமன், சோழவேந்தன், முசுகுந்தன், நளன், அருச்சுனன், மாருதப்புரவீகவல்லி முதலானவர்களால் தொழப்பெற்ற தீர்த்தத் திருத்தலம் இதுவாகும். கந்த புராணத்தின் சூத சங்கிதையிலும் கூட நகுலேச்சரம் பழமையான தலம் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் மூலம் இவ்வாலயத்தின் பெருமையை அறியலாம்.

விஜயன் இலங்கையை ஆட்சி செய்த போது இவ்வாலயத்துக்குச் சில திருப்பணிகளைப் புரிந்ததாக வரலாறு கூறுகிறது. இவ்வாலயத்தின் புராதனச் சிறப்புக்களை தட்சிணகைலாய புராணம், கைலாய மாலை, நகுலாசலபுராணம், நகுலமலைக் குறவஞ்சி, நகுலமலைச் சதகம், நகுலகிரிப் புராணம், நகுலேசுவரர் விநோத விசித்திர கவிப்பூங்கொத்து போன்ற நூல்கள் கூறுகின்றன.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றினையும் கொண்டு சிறப்பிக்கப்படுவது இவ்வாலயமாகும். இதன் இறைவன் நகுலேசுவரர், இறைவி நகுலாம்பிகை. முன்னர் திருத்தம்பலேசுவரம் என்ற பெயருடன் இருந்து இப்போது நகுலேச்சரம் எனக் கொள்ளப்படுகிறது. இவ்வாலயத் தீர்த்தம் கண்டகி தீர்த்தம், நகுல தீர்த்தம் எனச் சில காலங்கள் அழைக்கப்பட்டது. பின்னர் மக்கள் கீரிமலைத் தீர்த்தம் என்றே இதனை அழைக்கின்றனர். மாருதப்புரவீகவல்லி தன் குன்ம நோய் நீங்கப் பெற இத்தீர்த்தத்திலேயே நீராடியதாகவும் ஒரு வரலாறு உண்டு. இத்தீர்த்தம் பிதிர் கிரியை வழிபாட்டு முறையிலும் தனியிடம் பெறுகின்றது. இங்கு ஆறுகால பூசைகளும் நித்திய கிரியைகளாக இடம் பெற்று வருகின்றன. இங்கு மூல மூர்த்தி சிவலிங்கத்தோடு, பரிவார தெய்வங்களும் காணப்படுகின்றன. மகோற்சவம் மாசி மாதத்தில் பதினைந்து நாட்கள் நடைபெற்று மகா சிவராத்திரியில் தீர்த்தோற்சவம் நடைபெறும். இவற்றோடு வார விழாக்கள், மாதவிழாக்கள் போன்ற நைமித்திய கிரியைகளும் நடைபெற்று வருகின்றன.





தீர்த்தம்

## பாடச் சுருக்கம்

- ஈழத்து புராதன சிவாலயங்களுள் சிறப்பு மிக்கது நகுலேச்சரம்.
- மூர்த்தி, தலம், தீர்த்தம் இம்மூன்றும் ஒருங்கே அமையப்பட்ட தலம்.
- நகுல முனிவரின் சாப விமோசனம் பெற்ற தலம்.
- இராமன், சோழவேந்தன், முசுகுந்தன், நளன், அருச்சுனன், மருதப்புரவீகவல்லி முதலானோர் வழிபட்ட தலம்.
- பிதிர் கடன் செய்யப்படும் தலமாகும்.
- மகோற்சவம் மாசி மாதத்தில் 15 நாட்கள் நடைபெறும்.

## பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடையளியுங்கள்

1. நகுலேச்சர ஆலயம் எங்கு அமைந்துள்ளது?
2. நகுலேச்சர ஆலயத்தை வழிப்பட்டவர்களின் பெயர்களைத் தருக.
3. இவ்வாலயத்தின் இறைவன், இறைவி தீர்த்தம் என்பவற்றைக் குறிப்பிடுங்கள்.
4. இங்கு நடைபெறும் விழாக்கள் எவை?

## செயற்பாடு

உமது பிரதேச ஆலயமொன்றின் சிறப்பை பின்வரும் தகவல்கள் உள்ளடங்கும் வகையில் கட்டுரையாக்குக.

எழுந்தருளியிருக்கும் இறைவன், இறைவி, தீர்த்தம், கதைகள், மகோற்சவங்கள், பூசை முறைகள், நூல்கள், விழாக்கள்

# (இ) தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயம்

சிவ பூமியாகிய ஈழத்திலே சக்தி வழிபாடு தொன்று தொட்டு நிலவி வருகின்றது. இந்நாட்டில் மட்டுமன்றி உலகெங்கும் உள்ள சக்தி அடியவர்களால் போற்றி வணங்கப்படும் ஆலயமாக விளங்குவது தெல்லிப்பளை துர்க்கையம்மன் ஆலயம். யாழ்ப்பாணத்தின் வடக்கே காங்கேசன்துறைக்கு தெற்கில் தெல்லிப்பளை என்னும் கிராமம் உண்டு. அங்கு அமைந்துள்ள இவ்வாலயம் இருநூற்றி ஐம்பது வருட கால 'பழமைமிக்கது.



ஆலய முகப்பு

மகிடாசுரனை வதம் செய்தவள் தேவி துர்க்கை, அஞ்ஞானத்தை நீக்கி மெஞ்ஞானத்தை அருளுபவள்.

“நெஞ்சில் கவலை நிகழும் பயிராக்கி
அஞ்சி உயிர் வாழ்தல் அறியாமை தஞ்சமென்றே
வையமெல்லாம் காக்கும் மகா சக்தி நல்லருளை
ஐயமறப் பற்றல் அறிவு”

என பாரதியால் போற்றப்பட்டவள் அன்னை துர்க்கை. அவள் உறைந்திருக்கும் தெல்லிப்பளை ஆலயத்தின் தொன்மையை விளக்க ஒரு கதையுண்டு. தெல்லிப்பளை உழகுடைப்பதியில் வவுனாவத்தையிலுள்ள சைவ மரபில் தோன்றியவர் கதிர்காமர் எனும் பெரியார். எங்கெல்லாம் சைவ ஆலயம் உள்ளதோ அங்கெல்லாம் சென்று வழிபட வேண்டுமென்னும் விருப்புடையவர். 1750ம் ஆண்டளவில் காங்கேசன்துறையிலிருந்து தோணியில் தமிழகத்தின் வேதாரணியம் கரையை அடைந்தார். அங்கு பல ஆலயங்களைத் தரிசித்த காலத்தில் இவருக்கு ஒரு ஞான குரு வாய்க்கப்பெற்றார். பின் சக்தி ஆலயங்களுள் பிரசித்தி பெற்ற சொப்பனேஸ்வரி (துர்க்கா தேவி) ஆலயத்தைத் தரிசிக்கும் வாய்ப்பைப் பெற்றார். அங்கு வழிபாடு செய்யும் போது ஸ்ரீ சக்கரத்தை வைத்துப் பூசை செய்தல் சிறப்பென்பதை அறிந்து அவ்வாலயத்தில் அவரும் அவ்வாறே வழிபாடு செய்தார். இவ்வாறாகப் பத்து ஆண்டுகள் நிறைவு பெற, தனது யாத்திரையை முடித்துக் கொண்டு இலங்கை திரும்பினார். வரும்போது

ஸ்ரீசக்கரத்தையும் (யந்திரம்) வெண்கலக் கெண்டியையும் எடுத்துக் கொண்டு கடல் வழியாகவே காங்கேசன்துறையை வந்தடைந்தார். பின் கீரிமலைக்குச் சென்று நீராடினார்.

பின்பு அங்கிருந்து 3 மைல் தூரமுடைய தெல்லிப்பளையை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தார். அவ்வாறு வரும் போது களைப்பு அதிகரித்தது அதனால் அங்குள்ள இலுப்பை மர நிழலிலேயே படுத்து உறங்கினார். அப்போது துர்க்கை அம்மன் அவர் கனவிலே காட்சி கொடுத்தார்.

இந்தியாவிலிருந்து கொண்டு வந்த அப்புனித பொருள்களை அவ்விடத்திலேயே வைத்து வழிபடுமாறு கூறி மறைந்தருளினார். அம்மனின் அருள்படி இவரும் அவ்விடத்திலேயே அவற்றை வைத்து வழிபட்டார். அவர் அவ்வாறு வழிபட்ட இடமே தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயமாகும்.



ஆலய நுழைவாயில்

கதிர்காமரால் ஆன்மார்த்த வழிபாடாக ஆரம்பிக்கப்பட்ட அவ்விடம் தற்போது தேவஸ்தானமாகி கோபுரமும், அலங்கார வளைவும் கொண்ட நுழைவாயிலுடன் தெப்பக்குளமும் அமைந்து எழில் மிகுந்த ஆலயமாகத் துர்க்கை அம்மன் ஆலயம் விளங்குகின்றது.

இவ்வாலயத்தின் தல விருட்சம் இலுப்பை மரமாகும். இது இவ்வாலயச் சூழலில் காணப்படுகின்றது. வரட்சி மிகுந்த இவ்வாலய இடத்தில் நிலத்தை அகழ்ந்து தீர்த்தக் கேணி 1981ஆம் ஆண்டு அமைக்கப்பெற்றது. 1982இல் முதலாவது தீர்த்தோற்சவம் நடைபெற்றது. இதன் தீர்த்தம் ''துர்க்கா புஷ்கரணி'' ஆகும்.



தீர்த்தக்கேணி

அதிகாலை நாலரை மணிக்கு திருப்பள்ளியெழுச்சியுடன் இவ்வாலய பூசைகள் ஆரம்பமாகும். 1968ஆம் ஆண்டு முதல் ஆவணி வளர்பிறை பூரண நட்சத்திரத்தில் தொடங்கி திருவோணத்தில் தீர்த்தம் வரை பன்னிரு தினங்கள் மிக விமர்சையாகத் திருவிழா நடைபெறும். இவற்றோடு மகாசிவராத்திரி, நவராத்திரி, கார்த்திகை திருவிளக்கு முதலிய விஷேட தினங்களில் சிறப்பு வழிபாடுகளும் நடைபெறும்.

சமயப் பணியோடு சமூகப் பணியிலும் இவ்வாலயம் செயற்பட்டு வருகின்றது. குறிப்பாகப் பெற்றோரை

இழந்த, ஆதரவு அற்ற பெண்பிள்ளைகளை ஆதரித்து உணவூட்டி கல்வி புகட்டி வருகின்றது. இதன் பணியில் சிவத்தமிழ்ச்செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி அவர்களது முயற்சி விதந்து போற்றத்தக்கது.

### பாடச் சுருக்கம்

- உலகெங்கும் உள்ள சக்தி அடியவர்களினால் போற்றி வணங்கப்படும் ஆலயமாக இவ்வாலயம் காணப்படுகின்றது
- கதிர்காமர் என்பவரால் கொண்டு வரப்பட்ட ஸ்ரீ சக்கரம், வெண்கலக் கெண்டி முதலிய புனித பொருட்களை வைத்து இலுப்பை மரத்தின் அடியில் ஆத்மார்த்தமாக தொடங்கப்பெற்றவாலயமாகும்.
- 1981ல் துர்க்கா புஷ்கரணி எனும் தீர்த்தம் அகழ்ந்தெடுக்கப்பட்டது.
- திருவிழாவுடன் பல்வேறு விழாக்களும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது
- சமயப்பணியுடன் சமூப்பணியிலும் இவ்வாலயம் சிறந்து விளங்குகின்றது.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடையளியுங்கள்

1. தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயத்தின் தீர்த்தம் யாது?
2. இவ்வாலயத்தின் தல விருட்சம் யாது?
3. இங்கு இடம்பெறும் விழாக்கள் மூன்றினை குறிப்பிடுங்கள்.
4. இவ்வாலயத்தின் சமூகப்பணி யாது? அம்முயற்சியில் யாருடைய சேவை விதந்துரைக்கப்படுகின்றது?

### செயற்பாடு

1. உமது பிரதேச ஆலயங்களினூடாக ஆற்றப்படும் சமூகப்பணிகளைத் தொகுத்து மூன்று நிமிட பேச்சு ஒன்றினை வகுப்பறையில் பேசிக் காட்டுக.

## (ஈ) உகந்தைமலை முருகன் ஆலயம்

ஈழத்திலே பிரசித்தி பெற்ற முருகன் ஆலயங்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள் கிழக்கு மாகாணத்தின் அம்பாறை மாவட்டத்தினுடைய புராதனச் சிறப்பு மிக்க தலமே, உகந்தை முருகன் ஆலயம். இத்திருத்தலம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட புராதனச் சிறப்பு மிக்கது.



முருகன் ஆலயம்



''குன்றுகள் இருக்கும் இடத்தில் குமரன் உறைந்திருப்பான்'' என்பது இந்துப் பெருமக்களின் நம்பிக்கை. அது போலவே, உகந்தை மலைக்குன்று, அதனைச் சூழ நீர்ச்சுனைகள், விலங்குகள் நிறைந்த காடு, நிழல் தரும் பெரிய தேத்தா மரங்கள், ஆலமரங்கள் இவற்றுக்கு மத்தியிலே அமைந்திருப்பதே வடிவேலனின் உகந்தை ஆலயம். இச்சூழல் அடியவர்கள் மனதில் ஏற்படுத்திய பக்தியோடு இயைந்து இத்தலத்தின் வரலாறு வளர்ந்து வந்துள்ளது. இங்கு நீண்ட காலமாக ஓலைகளால் பந்தலிடப்பட்டே வழிபாடு நடைபெற்றது. 1885ம் ஆண்டு யாழ்பாணத்தவரான மார்க்கண்டு முதலாளி என்பவரால் இக்கோயிலுக்கான கட்டிடம் நிர்மாணிக்கப்பட்டது.

அரக்கர் குலத் தலைவராகிய சூரனுடன் முருகன் போர் புரிந்தார். அவனை அழிப்பதற்கு வேலினை ஏவினார் அப்போது வேலிலிருந்து பல கதிர்ப்பொறிகள் தோன்றின. அதில் முதலாவது பொறி தென் திசையில் கடல் கடந்து ஒரு தீவில் விழுந்தது. அந்த தீப்பொறி விழுந்த இடமே உகந்தை மலை என்பது இவ்வாலயம் பற்றிய ஐதீகம். மேலும் சூரபன்மனுடனான போருக்கு முன்னரும் பின்னரும் முருகன் இம்மலையிலேயே தங்கியிருந்தார். தங்கியிருக்க உகந்த இடமென்பதால் பின்னர் உகந்தை மலையென்று சொல்லப்படுகின்றது. அழகு முருகனின் படை வீடுகளில் இதுவும் ஒன்று என்ற இன்னொரு ஐதீகமும் காணப்படுகிறது.



இக்கோயில் பற்றிய செய்திகளை ''மட்டக்களப்பு மான்மியம்'' சிறப்பாகக் கூறுகிறது. அதில் வரும் ஒரு செய்தி இது. இராவணன் இலங்கை அரசனாக இருந்தபோது அவனுக்கு ஆற்றானாய்ச் சென்ற யமதர்மன் ''நீ ஒரு பாவி'' எனப் பழித்துரைத்து, தோல்வியடைந்து தன் யமலோகத்துக்கு ஓடினான்.

இராவணன் தன் பாவங்களுக்குப் பரிகாரம் தேடுவதற்காய், தட்சணாகிரி (திருகோணமலை) உகந்த கிரி (உகந்தை மலை) ஆகிய இரு மலைகளில் வழிபாடுகளைச் செய்து வந்தான். இராமன் இராவணனை வென்ற பின் உகந்த கிரி பாழடைந்து போனது. பல ஆண்டுகளுக்கு பின் ஆட்சி செய்த சிங்க குமாரன் என்பவன் நல்லாட்சி நடத்த விரும்பினான். அப்போது ''உகந்த கிரியில் ஆலயமேற்றி உமது எண்ணம்போல் வாழக்கடவை'' என்ற மூத்தோரின் அறிவுரையை தன் சிரமேற்கொண்டான். பாழடைந்த அவ்விடத்தில் திருப்பணிகள் செய்து வழிபாடு செய்யலானான். அத்தகைய வரலாற்றுப் பெருமை இவ்வாலயத்திற்கு உண்டு.

1885இல் இவ்வாலயம் நிர்மாணிக்கப்பட்டதன் பின் முதற் பூசகராக கோளாவில்லைச் சேர்ந்த காளியப்பன் என்பவர் நியமிக்கப்பட்டார். இங்கு ஆகம விதிப்படி பூசைகள் நடைபெறாவிட்டாலும், அதன் பின்னும் பூசகர்களே வழிபாடுகளை நடாத்தி வருகின்றனர். இவர்கள் பாணமை என்ற குடும்பத்தைச் சார்ந்தவர்கள். சிங்களப் பெயர்களை உடையவர்கள் என்ற போதும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாக விளங்குகின்றனர்.

இத்திருத்தலத்தின் விருட்சமாக வெள்ளை நாவல் மரம் உள்ளது. இது இவ் உகந்தை மலையுடன் சேர்ந்த பிள்ளையார் கோயிலின் மலையடிவார வாசலில் காணப்படுகின்றது. தடித்து, உயர்ந்து, விரிந்த கிளைகளுடன் இது நிழல் பரப்பி நிற்கிறது. ஆலய மூலஸ்தானத்தில் பிள்ளையார் சிலையும் பக்கத்தில் ஒரு தங்கவேலும் உண்டு. முருகன் ஆலயங்களில் நந்தி இருக்க வேண்டிய இடத்தில் மயில் இருப்பது வழமை. எனினும் இவ்வாலயத்தில் மயிலுக்குப் பதிலாக மூஷிகமே இருப்பது குறிப்பிடத்தக்கது.

கோவிலின் திருவிழா வருடந்தோறும் தவறாது நடைபெற்று வருகின்றது. கதிர்காமத் தீர்த்தத்தோடு ஒட்டிய ஆடிப்பூரணை நாளில் அல்லது அதன் அண்மைய நாட்களில் தீர்த்தம் நடைபெறும். கொடியேற்றம் ஏனைய ஆலயங்களைப் போல் பிராமண விதிகளின் படி அல்லாது சாதாரணமாகவே நடைபெறும். கதிர்காமத்துக்குச் செல்லும் பக்தர்கள் இவ்வழியே வந்து திருவிழாவைப் பார்த்துச் செல்வது வழக்கமாகும்.

திருமுருகனின் திருதலச் சிறப்பினை தம்பிமுத்து குமாரப்பெருமாள் என்பவர்,

''சீர்மேவு பழனியங் கிரிதனில் வள்ளியம்மை தன்னுடனே
செப்பமாய் ஓடமதில் ஏறியே வேலன் ............''

என மனமுருகிப் பாடுகிறார். சிங்கள மக்களும், தமிழ் மக்களும் இன, மத வேறுபாடு இன்றி வழிபாடு செய்யும் திருத்தலங்களுள் இதுவும் முதன்மை மிக்கது.

### பாடச் சுருக்கம்

- இவ்வாலயம் 1000 ஆண்டுகளுக்கு முற்பட்ட புராதன சிறப்புடையது.
- 1885ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தவரான மார்கண்டு முதலாளி அவர்களால் இக்கோயிலுக்கான கட்டிடம் நிர்மாணிக்கப்பட்டது.
- முருகனின் படை வீடுகளில் ஒன்று என்பது ஐதீகம்.
- இராவணன் உகந்த கிரியில் வழிபாடு செய்தான்
- இங்கு பாணாமை என்ற குடும்பத்தை சேர்ந்தவர்கள் பூசகர்களாக உள்ளனர்.
- இவ்வாலயத்தின் நந்தி இருக்க வேண்டிய இடத்தில் மயிலுக்குப் பதிலாக மூஷிகமே உள்ளது.
- மகோற்சவம் ஆடிப்பூரணை நாளில் அல்லது அதற்கு அண்மைய நாட்களில் இடம்பெறும்.

### பயிற்சிகள்

பின்வரும் வினாக்களுக்கு விடையளியுங்கள்

1. உகந்தை மலை முருகன் ஆலயம் எங்கு அமைந்துள்ளது?
2. இவ்வாலயத்தின் கட்டிடம் யாரால் எந்த ஆண்டு நிர்மாணிக்கப்பட்டது?
3. இக்கோயிலைப் பற்றிய செய்திகளைக் கூறும் நூல் எது?
4. இக்கோயிலில் நிகழ்த்தப்படும் பூசைமுறையினைச் சுருக்கமாக எழுதுக.

### செயற்பாடு

1. இலங்கையின் பிரசித்தி பெற்ற முருகன் ஆலயங்களின் பெயர்களைப் பட்டியற்படுத்துக.
2. அங்கு நிகழ்த்தப்படும் பூசைமுறைகளின் வேறுபாட்டை ஆசிரியர் உதவியுடன் கலந்துரையாடுக.

# சைவநெறி பாடத்திட்டம்
## தரம் - 8

| தேர்ச்சிகளும், தேர்ச்சி மட்டங்களும் | உள்ளடக்கம் |
|---|---|
| 1.0 அன்றாட வாழ்கையில் இறை சிந்தனையுடன் சமய ஒழுகலாறுகளைக் கடைப்பிடிப்பர். | ◆ கடவுள் |
| 1.1 கடவுள் ஒருவரே உண்மையானவர் என்பதை உபநிடதக் கதைகள் ஊடாக விளக்கி, அவற்றை வாழ்வில் பின்பற்றுவர். | |
| 1.2 ஆலயங்களில் பக்தியுடன் கடவுளை வணங்குவர். | ◆ ஆலய வழிபாடு - I<br>● கோபுர தரிசனம்<br>● நந்தி, பலிபீடம், மூலவர், பரிவார தெய்வ வழிபாடு<br>● அர்ச்சனை, தோதிதிரம்<br>● அட்டாங்க, பஞ்சாங்க வழிபாடு<br>● தியானம் |
| 1.3 ஆலயங்களில் வழிபாட்டு ஒழுகலாறுகளைப் பின்பற்றுர். | ◆ ஆலய வழிபாடு - II<br>● ஆலயத்துக்குச் செல்லும் முறை<br>● ஆலயத்தில் செய்யத் தக்கவை, செய்யத் தகாதவை<br>● இயமநியமங்கள் (அறுமுகநாவலர் - சைவவினாவிடை<br><br>◆ விழுமியப் பண்புகள்<br>● மனவடக்கம் - விளக்கம்<br>● இனியவை பேசுதல் - விளக்கம்<br>● சூழலைப் பேணுதல்: பாதுகாத்தல் - விளக்கம்<br>● தானதருமம் செய்தல் - விளக்கம் |

| | |
|---|---|
| 1.4 வாழ்க்கை முன்னேற்றம் பெற வேண்டும் என்னும் நம்பிக்கையில் வாழ்வியல் சடங்குகளை அறிந்து, அவற்றை முறைப்படி பின்பற்றுவர்.<br><br>1.5 வாழ்வியல் பண்டிகைகள், விரதங்கள் என்பன வகிக்கும் முக்கியத்துவத்தை உணர்ந்து கடைபிடிக்க முன்வருவர். | ◆ பிறந்தநாள் விழா<br>● அறிமுகம்<br>● சடங்கின் முக்கிய அம்சங்கள்<br><br>◆ பண்டிகைகள்<br>● ஓணம் பண்டிகை<br><br>◆ விரதங்கள்<br>● மாத விரதங்கள்<br>● ஆவணி ஞாயிறு<br>● ஆவணிச் சதுர்த்தி<br>● புரட்டாதிச் சனி<br>● புரட்டாதி மகாளயம்<br><br>◆ கடவுளுக்குரிய விரதங்கள் விநாயகர் சஷ்டி பெருங்கதை விரதம் பிரதோஷ விரதம் கிருஸ்ண ஜயந்தி சித்திரைப் பரணி |
| 2.0 சமய நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து, அவற்றை வாழ்வில் பின்பற்றுவர்.<br><br>2.1 நாயன்மாரின் வரலாறுகள் மூலமாக அவர்களது சமய நம்பிக்கையையும் பக்தியையும் உணர்ந்து, அவற்றின் வழி ஒழுகுவர் : அவர்களது பக்தியின் சிறப்புகளையும் பணிகளையும் எடுத்துரைப்பர். | <br><br><br>◆ மங்கையர்க்கரசியார் |
| 3.0 திருமுறைப் பாடல்களையும் தோத்திரப் பாடல்களையும் பண்யோடும் பக்தியோடும் பாடுவர்.<br><br>3.1 திருமுறைப்பாடல்கள், தோத்திரப் பாடல்கள் பற்றி அறிந்து அவற்றைப் பக்தியோடு பாடுவர். அவற்றுக்புகுப் போருள் கூறுவர். | <br><br><br>◆ திருமுறைப்பாடல்கள் |

- பஞ்ச புராணங்களைப் பாடும் ஒழுங்குமுறையை அறிதல். பாடல் பாடியவர், பாடப்பட்ட சந்தர்ப்பம், தலம், பாடல் அடங்கியுள்ள திருமுறை ஆகியவற்றைக் குறிப்பிடல்.

  பாடலுக்குப் பொருள் குறிப்பிடல். அருஞ் சொற்களை விளக்குதல் பொழிப்புரை எழுதுதல், பாடல்களை மனனம் செய்தல். பிழையறப் பாடுதல்: பண்ணோடு, பொருள் உணர்ந்து பாடுதல், கூச்சமின்றிப் பாடுதல் என்பவற்றின் அவசியத்தைக் குறிப்பிடல்.

◆ தேவாரங்கள்

1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம் "சதுரம் மறை...." "மண்ணில் நல்ல...."
2. திருநாவுக்கர்சு நாயனார் தேவாரம் "பண்ணினேர்மொழி..." "குனித்த புருவமும்..."
3. சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம் "நீளநினைந்தடியேன்..." "தில்லைவாழந்தணர்..."
4. மாணிக்கவாசகசுவாமிகள் - திருவாசகம் "பாரொடு விண்ணாய்..."
5. திருவிசைப்பா "ஏகநாயகனே..."
6. திருப்பல்லாண்டு "மிண்டுமனத்தவர்...."
7. திருமந்திரம்

| | |
|---|---|
| | "அன்பும் சிவமும்..."<br>8. பெரியபுராணம்<br>"ஐந்து பேரறியும்...."<br>பிற்காலத் தோத்திரப் பாடல்கள்<br>1. திருப்புகழ்<br>"சரணகமலாலயத்தை...." |
| 4.0 சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுவர்.<br><br>4.1 ஆலய வழிபாடு, ஆலயத்தில் நிகழ்த்தப்படும் கிரியைகள் பற்றி அறிந்து, அவற்றுக்கு மதிப்பளித்து ஒழுகுவர். | ◆ ஆலய வழிபாடு - III<br>● நித்திய, நைமித்திய, காமிகக் கிரியைகள் |
| 5.0 சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து, அவர்களை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.<br><br>5.1 நாயன்மார் (நால்வர்) வரலாறுகள் ஊடாக அவர்கள் செய்த சமயத் தொண்டுகளை இனங்காண்பர்: அவற்றுக்கு மதிப்பளித்து, தமது வாழ்வில் கடைப்பிடிப்பர்.<br><br>5.2 சமயத்தை வளர்த்த பெரியார்களின் பணிகளை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர். | ◆ நால்வரும் அவர்களது அற்புதங்களும், தொண்டுகளும்<br><br>◆ இராமகிருஷ்ண பரமஹம்சர் (இராமகிருஷ்ண பரமஹம்சரின் பணிகளைப் பின்வரும் அடிப்படையில் பகுப்பாய்வு செய்தல்)<br>● வரலாற்றுச் சுருக்கம் (காலமும் பின்னணியும் பிறப்பும்)<br>● பணிகள் - சமயம், சமூகம்<br>● மதிப்பீடு |

| | |
|---|---|
| 6.0 சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளக்கி, அவை தொடர்பான கருத்துக்களை வெளிப்படுத்துவர்.<br><br>6.1 சைவ சித்தாந்தத் தத்துவத்தில் முப்பொருள்களும் உண்மை என்பதையும், அவற்றின் இயல்புகளையும் நூலாதாரங்களையும் விளக்குவர்.<br><br>6.2 ஆன்மீக விடுதலையை நெக்காகக் கொண்டு, அதற்கான செயற்பாடுகளை மேற்கொள்வர். | ◆ பசு<br>● பசுவின் இலக்கணம்<br>● பசுவின் இயல்பு<br>● பதிக்கும் பசுவுக்குமுள்ள தொடர்பு<br>◆ பஞ்சமாபாதகங்களைக் கைவிடல் |
| 7.0 நாட்டார் சமய வழிபாடுகளையும், வழக்காறுகளையும் அறிந்து, அவற்றுக்கு மதிப்பளிப்பர்.<br><br>7.1 நாட்டார் தெய்வங்களில் பெண் தெய்வங்கள் பற்றி விளக்குவர். | ◆ பெண் தொய்வங்கள்<br>காளி<br>கொத்தி<br>பிடாரி<br>நாச்சிமார்<br>(பின்வரும் அடிப்படையில் பகுப்பாய்வு செய்தல்)<br>● வழிபடும் இடங்கள்<br>● வழிபாட்டு முறைகள்<br>● சமயசமூக முக்கியத்துவங்கள்) |
| 8.0 ஈழத்து சைவ மரபுகளைப் பேணிக் காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கிளை விருத்தி செய்வர்.<br><br>8.1 ஈழத்து சைவ ஆலயங்களையும் அவற்றின் சிறப்பம்சங்களையும் விபரிப்பர். | ◆ விநாயகர் ஆலயம் - கண்டி கட்டுக்கலை விநாயகர் ஆலயம்<br>◆ சிவாலயம் - நகுலேஸ்வரம்<br>◆ அம்மன் ஆலயம் - தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயம்<br>◆ முருகன் ஆலயம் உகந்தை முருகன் ஆலயம். |

# සිංහල වර්ණ මාලාව

| | | | | | |
|---|---|---|---|---|---|
| අ | ආ | ඇ | ඈ | ඉ | ඊ |
| උ | ඌ | ඍ | ඎ | ඏ | ඐ |
| එ | ඒ | ඓ | ඔ | ඕ | ඖ |
| (අ)ං | (අ)ඃ | | | | |
| ක | ඛ | ග | ඝ | ඞ | ඟ |
| ච | ඡ | ජ | ඣ | ඤ | ඦ |
| [illegible] | ඨ | ඩ | ඪ | ණ | ඬ |
| [illegible] | ථ | ද | ධ | න | ඳ |
| ප | ඵ | බ | භ | ම | ඹ |
| ය | ර | ල | ව | | |
| ශ | ෂ | ස | හ | ළ | ෆ |

நம் நாட்டு இளஞ் சந்ததியினரின் நலன் கருதி நம் அரசு உங்களுக்கு வழங்கும் இந்நூலை அடுத்த ஆண்டும் உங்கள் சகோதரர்களுக்கு வழங்கத்தக்க முறையிற் கவனமாக வைத்துப் படிக்கவும்.

பாடசாலையின் பெயர்:- ..........................................................................

| | மாணவர் பெயர் | தரம் | வகுப்பு ஆசிரியரின் கையொப்பம் |
|---|---|---|---|
| 2013 | .......................... | ........ | ........ |
| 2014 | .......................... | ........ | ........ |
| 2015 | .......................... | ........ | ........ |

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



2013/T/8/166/39,000